

# நான் பெருமையாகச் சொல்லவில்லை

என் எடை, பிறந்தபோது இருந்ததைவிட இரு மடங்காகி விட்டது, நான்காவது மாதத்தில். பெரும் சாதனை! இது அமுல்ஸ்ப்ரேயின் சிறப்பைக் காட்டுகிறது.





அறிமுகப்படுத்திய இரண்டு ஆண்டுகளுக்குள், அமுல்ஸ்ப்ரே, குழந்தை உணவுகளுள், இந்தியாவிலேயே உச்ச விற்பனையை எய்திவிட்டது. பெரும் சாதனை! இது அமுல்ஸ்ப்ரேயிடம் தாய்மார்களுக்குள்ள நம்பிக்கையையும், குழந்தைகள் அதை எவ்வளவு விரும்புகின்றன என்பதையும் காட்டுகிறது.

உங்கள் குழந்தைக்கு, பிறந்த முதல் வாரத்திலிருந்து அமுல்ஸ்ப்ரே தரலாம். அமுல்ஸ்ப்ரே எளிதில் சீரணிக்கக் கூடியது; சரிவிகித ஊட்டச் சத்துக்கள் நிறைந்தது. முழுமையான வளர்ச்சிக்காக, தரமுயர்ந்த அதிக புரதச் சத்துக்கள் கொண்டது.




## அமுல்ஸ்ப்ரே

தாய்ப் பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது

ASP/AS-19

# கல்கி

## பொருளடக்கம்



பரிதாபி, புரட்டாசி 1 - செப்டம்பர் 17, 1972



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம், கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

## கட்டிடங்கள் உறுதியாக நீடித்து நிலைக்க

# செட்டிநாடு சிமெண்ட்




கிணறுகள், களஞ்சியங்கள், களங்கள் உறுதியாக அமையவும், நீடித்து நிலைக் கவும் உதவுவது செட்டிநாடு சிமெண்ட்.

விரைவில் படிமானமாகி வலுவாக இறுகும் இதன் தன்மை கட்டுமானங்களை சிக்கனமாக கட்ட உதவுகிறது.

தயாரிப்பாளர்கள்

**செட்டி நாடு சிமெண்ட் கார்ப்பொரேஷன் லிமிடெட்**

6, அரண்மனைக்காரத்தெரு, சென்னை-1 போன் 25356 தந்தி: "BESTCEMENT"

தொழிற்சாலை: குமாரராஜா முத்தையா நகர், புலியூர் (கரூர்), திருச்சி மாவட்டம். போன் 144, தந்தி "CEMENT"

சேல்ஸ் டிப்போக்கள்: நெ.3, முதல் மெயின் ரோடு, காந்திநகர் போஸ்ட், பெங்களூர்-9 போன்: 71715

18-C, சக்கியாஸ் லேன், கல்கத்தா-1 போன்: 22-4986

கல்கி
மலர் 32
இதழ் 7



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# புதிய ரயில் இணைப்பு

கேரள மாநிலத்தின் திருவனந்தபுரத்தையும், தமிழ் நாட்டின் திருநெல்வேலியையும், இடையிலுள்ள கன்னியாகுமரியையும் இணைக்கும் புதிய ரயில் பாதைக்கு அடிக்கல் நாட்டி வேலையைத் துவக்கி வைத்ததன் மூலம் பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி இப்பகுதியின் பொருளாதார முன்னேற்றத்துக்கும், இங்கே வாழும் மக்களின் புது வாழ்க்கைக்கும் அஸ்திவாரம் போட்டுக் கொடுத்திருக்கிறார் என்று சொல்ல வேண்டும். தொழில் வளர்ச்சி மூலம்தான் மக்களது வறுமையை அகற்ற முடியும் என்பது அறிஞர்கள் கண்ட உண்மை. அத்தகைய தொழில் வளர்ச்சிக்கு இப்புது முயற்சி வழிகோலியுள்ளது.

பதினொன்று கோடிக்கு மேல் செலவு செய்து அமைக்கப்படவிருக்கும் சுமார் 164 கிலோமீட்டர் நீளமுள்ள இப்புதிய ரயில் பாதை கேரளத்தில் இரண்டு மாவட்டங்களிலும், தமிழ் நாட்டில் இரண்டு மாவட்டங்களிலும் ஊடுருவிச் செல்லும். சுமார் முப்பது கிலோ மீட்டர் திருவனந்தபுரம், நாகர்கோயில் பகுதியிலும், மற்றவை கன்னியாகுமரி, தூத்துக்குடி, திருநெல்வேலி பகுதியிலும் இருக்கும்.

இப்பகுதிகளில் ரப்பர், தேங்காய் நார் முதலிய விளைபொருள்களும், கடல் உப்பு, முத்து, சங்கு போன்ற கடல் வளப் பொருள்களும் நிரம்பி இருந்தாலும், மக்கள் வாழ்க்கையையும், தொழில் வளர்ச்சியையும் கருத்தில் கொண்டு பார்த்தால் பின்தங்கிய பகுதிகளேயாகும். பின்தங்கிய பகுதிகளில் புதுத் தொழில்களை ஆரம்பிக்க முன்வருவோர்களுக்குப் பல்வேறு சலுகைகளை அரசு வழங்குகிறது. அவை எல்லாம் இருந்தும் தொழில் வளர்ச்சி சூடு பிடிக்கவில்லை என்றால், ஆதார அமைப்புகள் இல்லாமையோ, குறைவாக இருப்பதோதான் முக்கிய காரணமாகும். இங்கே போடப்படும் புதிய ரயில் பாதை மூலம் இக்குறை நீங்கும். இப்பகுதியின் கரையோரப் பிரதேசமும், உட்பிரதேசமும் இனி தொழிற்களங்களாக மாறக்கூடிய வாய்ப்புப் பெறுகின்றன. கடல் வளத்தை ஆதாரமாகக் கொண்ட ரசாயனத் தொழில்கள் விரைவாக வளரும் சாத்தியக்கூறுகள் அதிகமாக இருப்பதால், துரிதமாக இப்பகுதி முன்னேறக்கூடும். ரயில் பாதை வேலை முடிவடைய மூன்று ஆண்டு காலம் பிடிக்குமாதலால், இப்பகுதியில் தொழில் பேட்டை முதலிய அமைப்புக்கள் ஏற்படுவதற்கான முயற்சிகளைத் தமிழக அரசாங்கமும், தமிழகத் தொழில் அதிபர்களும் இப்போதிலிருந்தே மேற்கொள்ளுவது பயன் அளிக்கும்.

இப்புதிய ரயில் பாதை விஸ்தரிப்புடன், ஒரு விதத்தில் இணைந்துள்ளதாகவே கருதப்பட வேண்டியது சேது சமுத்திரத் திட்டம். மேற்கே அரபிக் கடல் பகுதியிலிருந்து, கிழக்கே வங்காளக் கடல் பகுதிக்கு வரவேண்டிய வணிகக் கப்பல்கள் இப்போது இலங்கைத் தீவைச் சுற்றிக் கொண்டுதான் வரவேண்டியிருக்கிறது. இது அவசியமில்லாத ஒரு பூப்பிரதக்ஷணம். சேது சமுத்திரப் பகுதியில் உள்ள நிலப்பரப்பில், சூயெஸ் கால்வாயைப் போன்றதொரு சிறிய கால்வாய் வெட்டி இரு கடல்களையும் இணைத்து விட்டால், போக்குவரத்து சுலபமாவதுடன், இப்பகுதியின் பொருளாதாரமும் அபிவிருத்தி அடையும். இதன் சாத்தியக் கூறுகள் எல்லாவற்றையும் பல ஆண்டுகளுக்கு முன்பே ஸர் 'ஏ. ராமஸ்வாமி முதலியார் போன்ற தொழிலதிபர்கள் ஆராய்ந்து திட்டமே வகுத்துக் கொடுத்திருக்கின்றனர். எனினும், திட்டம் ஏட்டளவிலேயேதான் இன்னமும் இருக்கிறது. கடல் போக்குவரத்து விவகாரங்களைக் கவனிக்கும் மத்திய அரசு இலாகா, இந்த அம்சத்தில் சிறிது கவனம் செலுத்துவது விரும்பத்தக்கது. இதன் மூலம் தமிழ் நாட்டின் தொழில் முன்னேற்றம் மேலும் வேகமடையும்.

திருவனந்தபுரம் — திருநெல்வேலி ரயில் பாதை திட்டத்தை இப்போதாவது, நாடு சுதந்திரம் பெற்ற வெள்ளிவிழா ஆண்டிலாவது, செயலில் கொண்டு வந்தது குறித்துச் சந்தோஷப்படவேண்டும்.

# அநாகரிகத்தின் எல்லை!

மனிதன் எத்தனையோ நாகரிக முன்னேற்றம் அடைந்துவிட்டான் என்று நாம் நினைத்துப் பெருமைப்பட்டுக் கொண்டிருக்கும் போது திடீர் திடீரென்று நடக்கும் சில அசம்பாவிதங்கள், உலகம் இன்னும் கற்கால அநாகரிகத்திலிருந்து வெகுதூரம் முன்னேறி விடவில்லையோ என்று நம்மை விசனத்துடன் சந்தேகப்பட வைக்கின்றன.

ஒலிம்பிக் விளையாட்டுக்கள் நடைபெறும் மியூனிக்கில் இஸ்ரேலிய விளையாட்டு வீரர்கள் ஒன்பது பேர் அராபிய அசுரர்கள் சிலரால் படுகொலை செய்யப்பட்டது அநாகரிகத்தின் உச்சகட்டமாகும். ஒலிம்பிக் விளையாட்டுக்கள் சர்வதேச நேசப்பான்மையை வளர்ப்பதற்காகவே ஏற்பட்டவை. அங்கு விரோதப் பான்மையைப் படுபாதகமான விதத்தில் காட்டிக் கொண்டது மன்னிக்க முடியாத குற்றமாகும்.

இஸ்ரேலிய விளையாட்டு வீரர்களைக் கடத்திச் சென்ற அராபிய கொரில்லாக்கள் தங்கள் நோக்கம் நிறைவேறாது என்று தெரிந்ததும் அவர்களைக் கொன்றுவிட்டுத் தாங்களும் போலீஸாரின் துப்பாக்கிகளுக்கு இரையானார்கள்.

'பாலஸ்தீனத்தை விடுவிக்கும் முயற்சி'யில் அராபியர்களுக்கு உலக நாடுகள் காண்பிக்கக்கூடிய கொஞ்சநஞ்ச அனுதாபத்தையும் இதுபோன்ற செயல்களால் அராபியர் இழந்துவிடுவர் என்பது உறுதி. இதைப் புரிந்து கொள்ளாமல் அராபிய பயங்கரவாதிகள் அடங்கிய சில குழுக்கள் அரபு நாடுகள் சிலவற்றில் இயங்கி வருகின்றன. விமானங்களை ஹைஜாக் செய்வது, யூதர்களைப் படுகொலை செய்வது போன்ற காரியங்களில் பழிவாங்கும் நோக்கத்துடன் இவர்கள் ஈடுபட்டு வருகிறார்கள். அலை நினைத்துக் கொண்டு உரலை இடிப்பது போன்ற கதை தான் இது.

உலக நாடுகள் அனைத்துமே கூட்டாக முயன்று இதுபோன்ற பயங்கரவாதிகளை ஒடுக்குவதில் தீவிர கவனம் செலுத்த வேண்டும். இதை உணர்ந்தே இஸ்ரேல் பயங்கரவாதிகளான அராபியக் கொரில்லாக்களுக்கு எந்த நாடும் அடைக்கலம் தரக்கூடாது என்ற நியாயமான கோரிக்கையை விடுத்திருக்கிறது. அமெரிக்காவும் பயங்கரவாதிகளை வளைத்துப் பிடிக்க உலக நாடுகளின் ஒத்துழைப்பைக் கோரியிருக்கிறது.

மனிதத் தன்மையும் நாகரிக முன்னேற்றத்தில் அக்கறையும் கொண்ட எந்த அரசும் மேற்படி கோரிக்கைகளைப் புறக்கணிக்க முடியாது.

# ஜோதி அணைந்தது!

தனி மனிதர் ஒருவர் மறைந்ததும், அவருடன் ஒரு சகாப்தம் மறைகிறது என்று ஒரே மனத்துடன் ஆயிரக்கணக்கான மக்கள் மனம் நெகிழ்ந்து உருகும் பெருமை படைத்தவர் மிகச் சிலரே உளர். இந்த மிகச் சிலர் என்ற கூட்டத்தில் இடம் பெற்று, இசை உலகில் —



முக்கியமாக ஹிந்துஸ்தானி இசை உலகில் — ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு காலம் மங்காத ஜோதியாகப் பிரகாசித்து, சென்ற வாரம் தமது 110வது வயதில் அமரத்துவம் எய்திய ஸரோட் வித்வான் பத்மபூஷண் உஸ்தாத் அலாவுதீன்கான், இசையுடன் தாமே இரண்டற லயித்துப் போனவர் என்று சொல்லலாம்.

நீண்டகால குருகுலவாசத்தின் மூலமும் சாதனை மூலமும் இசையில் அபாரத் தேர்ச்சி பெற்ற அலாவுதீன்கான் அதன் பின் அதைவிட நீண்ட காலம் அதை உலகில் பிரகாசப்படுத்தியதோடு அற்புதமான ஷிஷ்யமணிகளையும் உருவாக்கியுள்ளார். அவருடைய இசை மரபின் வாரிசுகளாக, நம்மிடையே புகழுடன் விளங்கிக் கொண்டிருப்பவர்கள் அவருடைய புதல்வர் ஸரோட் வித்வான் உஸ்தாத் அலி அக்பர் கான், மற்றும் சிதார் வித்வான் பண்டித் ரவிசங்கர், ரவிசங்கரின் மனைவியும் அலாவுதீன்கானின் புதல்வியுமான ஸ்ரீமதி அன்னபூர்ணா — ஆகியோராவர். இந்துப் பெயர்களும், முஸ்லிம் பெயர்களும் எப்படி அவர் குடும்பத்திலேயே கலந்திருக்கின்றன என்பதை நினைக்க நினைக்க நம்முன் அவருடைய பரந்த உள்ளமும், உயர் பண்புகளும் மேலோங்கிப் பிரகாசிக்கின்றன.

விலை கண்ட்ரோல்

விலைவாசி உயர்வு

சவான்

உற்பத்தி பெருக்கம் – வரி குறைப்பு

நம்மை விட்டுட்டு வாலைப் பிடிச்சால் இதான் கதி!

மக்கள்

விலைவாசி உயர்வை உடனடியாகக் கட்டுப்படுத்த முடியாது என்று சவான் பேசியிருக்கிறார். — செய்தி

ஆமாம்! நாம தண்ணிக்குக் கஷ்டப்படக்கூடாதுன்னுதான் மகராசன் முதலிலேயே திறந்து வைச்சிட்டாங்க....

கள்–சாராயம் விற்கப்படும்

சென்னையில் குடிநீர்ப் பஞ்சம்!



பாரதீய வித்யா பவனத்தின் சென்னை கிளை கட்டியுள்ள புதிய வேங்கட கலைக்கூடத்தை ராஷ்டிரபதி வி. வி. கிரி அவர்கள் குத்து விளக்கேற்றி 2 - 9 - 72 அன்று திறந்து வைத்தார். பவன் தோன்றக் காரண புருஷரான கே. எம். முன்ஷியின் சிறப்பியல்புகளைப் பற்றிச் சுவைபடக் கூறி அவர் திரு உருவப் படத்தைத் திறந்து வைத்த தமிழக ஆளுநர் கே. கே. ஷாவையும், விழாவுக்குத் தலைமை வகித்த தமிழக முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி அவர்களையும், பவனுக்குச் சிறப்புப் பணி புரியும் ஸ்ரீ டி. வி. விசுவநாதய்யர் அவர்களையும் படத்தில் காணலாம்.





□

கன்யாகுமரியில் புதிய ரயில் பாதைக்குப் பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அடிக்கல் நாட்டினார். இந்த விழாவில் காமராஜ், ரயில்வே உதவி மந்திரி மகமத் குரைஷி, ரயில்வே மந்திரி டி. ஏ. பை ஆகியோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

□

தூத்துக்குடியில் வ. உ. சி.யின் தபால் தலை வெளியீட்டு விழாவில் பாரதப் பிரதமரும், தமிழக முதன் மந்திரியும்.

●

கப்பலோட்டிய தமிழர் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் திருவுருவச் சிலையைப் பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி திறந்து வைக்கிறார்.



# தமிழ் நாட்டிலே

தீரன்

## அழைத்துத்தான் வர வேண்டுமா?

பாண்டிச்சேரி அரசு சம்பந்தமான சில விவரங்களை மத்திய இரகசிய போலீஸார் விசாரிக்க வந்தபோது பாண்டிச்சேரி பொதுத் துறை அமைச்சர் திரு ராமசாமி கடுங்கோப முற்று, "இவர்களை யார் இங்கு அழைத் தார்கள்? இப்படிப்பட்ட விசாரணைகளோடு எங்கள் அரசு ஒத்துழைக்காது" என்று பொருள்பட ஆத்திரத்தோடு கூறியிருக்கிறார். அமைச்சர் ஒன்றை மறந்துவிட்டார். 'பாண் டிச்சேரி' என்பது தமிழ்நாடு போல் முழு மாநிலம் கூட அன்று. வெறும் யூனியன் பிரதேசம்தான். ஒரு யூனியன் பிரதேசத்தில் அவர்கள் வெற்றிலை பாக்கு வைத்து அழைத்த பின்தான் மத்திய போலீஸ் வந்து விசாரணை களைத் தொடங்க வேண்டும் என்பதில்லை. நம் அரசியல் சட்டப்படி மத்திய அரசுக்கு இப்படிச் சில உரிமைகள் உள்ளன. நாட்டு நலனுக்கான விசாரணைகளை எந்த மாநிலத் திலும் எப்போதும் செய்ய மத்திய இரகசியப் போலீசுக்கு உரிமை கொடுக்கப்பட்டிருக் கிறது. இது அமைச்சர் அறிய வேண்டியது.

## கல்வித் துறையில் நஷ்டம்

ஹைதராபாத் நிர்வாகப் பயிற்சிக் கழ கத்தைச் சேர்ந்த நிபுணர் குழு ஒன்று நமது தமிழ்நாடு அரசாங்கத்தின் மாநிலக் கல்வித் துறையிலே நிர்வாகம் சீரற்றிருப்பதால் தொண்ணூறு கோடி ரூபாய் வரை நஷ்டம் ஏற்படுவதாக ஆராய்ந்து ஓர் அறிக்கையைத் தயாரித்திருந்தது; அதில் பல உருப்படியான யோசனைகள் கூறப்பட்டிருந்தது என்றும் ஆனால் நிபுணர் குழு உருவாக்கிய அந்த 'இர கசிய அறிக்கையை'த் தமிழ்நாடு அரசு நிரா கரித்து விட்டதுடன், "இந்தக் குழுவுக்கு இப்படி யெல்லாம் ஆராயவும், கண்டுபிடிக்க வும் அதிகாரம் அளித்தது யார்?" என்று கேட்டதாகவும் தெரிகிறது. ஒரு நல்ல யோசனையைக் கூறுவதற்குக்கூட யாருடைய அதிகாரத்தையாவது பெற்றுத்தான் கூற வேண்டுமா என்ன? இப்படி யோசனைகளைக் கூறவும், நஷ்டம் தவிர்க்கும் பரிந்துரைகளைக் கூறவும், நஷ்டங்களைக் கண்டுபிடிக்கவும் தானே நிர்வாகப் பயிற்சிக் கழகங்களே உள்ளன?

## பிரதமரின் ஒரு கருத்து

நெல்லை — குமரி இரயில் பாதையைத் தொடங்கி வைப்பதற்காகக் கன்னியா குமரிக்கு வந்திருந்தபோது பிரதமர் இந்திரா ஒரு கருத்தை மனப்பூர்வமாகவும், உருக்க மாகவும் கூறியிருக்கிறார்.

"தொழில் நுட்பங்களைக் கண்டு பிடிப்பதும் இரயில் பாதைகளை அமைப்பதும் எளிது என்று கூறலாம். ஆனால் முந்தைய ஆன்மிக அழகையும், சிந்தனையையும் பெறுவதுமிகவும் கடினம். பயணங்களும், போக்கு வரத்தும் பெருகப் பெருக ஒரு புனித இடத்தின் அழகும், அமைதியும், தூய்மையும் குறைந்து கொண்டே வருகின்றன. பஸ் நிலையங்களும் இரயில் நிலையங்களும் அசுத்தமாகக் காணப் படுகின்றன. அவ்விடங்கள் வியாபாரத்தலங் களாகக் காட்சி யளிக்கின்றன. எங்கும் விளம் பரப் பலகைகளும், அசிங்கமான தோற்றங் களுமே இவ்விடங்களில் நிறைந்து காணப் படுகின்றன" என்று பிரதமர் பேசியிருப்பது கவனிக்கத் தக்கது. ஆன்மிக அழகு பற்றியும் தெய்விகத் திருத்தலங்கள் வளர வளர வியா பார நகரங்கள் ஆகிவிடுவது பற்றியும் பிர தமர் கூறியுள்ள கருத்துக்கள் வரவேற்கத் தக்கவை; சிந்திக்கத் தக்கவை; பாராட்டுக் குரியவை.

## கட்சி வசூலும் கூடாது

தமிழ்நாடு பொதுப் பணித் துறைத் தலைமை என்ஜினீயர், 'அரசாங்க ஊழியர் யாரும் தன்னுடைய இலாகாவின் பெயரைப் பயன்படுத்திச் சமய விழாக்களுக்குப் பணம் வசூல் செய்வதோ அல்லது அவைகளில் பங் கெடுத்துக் கொள்வதோ கூடாது. எல்லா மதங்களைச் சேர்ந்தவர்களுக்கும் இது பொருந் தும்' என்று ஓர் அறிக்கை விட்டிருக்கிறார்.








இந்த அறிக்கையோடு, 'அரசாங்க ஊழியர் எவரும் இலாகாவின் பெயரால் கட்சிகளுக்கு வசூல் செய்து தரவோ, கட்சி மாநாடுகளில் பங்குகொள்ளவோ கூடாது' என்பதாக மற்றொரு சுற்றறிக்கையையும் தலைமை அதிகாரி தாராளமாக உடனே அனுப்ப வேண்டும். கட்சிக்காக — குறிப்பாக அதிகாரத்தில் இருக்கும் கட்சிக்காக நடக்கும் கெடுபிடி வசூல்கள் தான் இந்தக் காலத்தில் அதிகம். அரசியல் கட்சிகளே இப்போது சமயங்கள் போலாகி விட்டன. ஆளும் கட்சிகளே வலுவான மதங்களாகிவிட்டன. அவைகளுக்கு இல்லாத வசூலா சமயங்களுக்கு நடந்துவிடப் போகிறது?

## கல்லூரி விழாவில் கட்சிக் கொடி ஏன் ?

**தூ**த்துக்குடி வ.உ.சி. கல்லூரி விழாவில் நிகழ்ந்த அசம்பாவிதங்கள் வருந்தத்தக்கவை; நடக்கக் கூடாதவை. என்றாலும் அந்த விழாவில் கட்சிக் கொடிகளோடு சிலர் வந்து இருந்ததும், பின்னால் மாணவர்களைத் தடிகள் கொண்டு பயமுறுத்தியதுமே கலகத்துக்குக் காரணம் என்று சொல்லப் படுகிறது. ஒரு கல்லூரி எல்லைக்குள் நடக்கும் பொது விழாவில் அரசியல் கட்சிக் கொடிகளுக்கு என்ன இடம் இருக்க முடியும்? தன் வசதிக்காக ஆளும் கட்சி சில தவறுகளை அநுமதிக்கப் போக எதிர்பாராத பல புதிய தவறுகளே அதனால் நடந்து விடுகின்றன.

## இங்கே மட்டும் என்னவாம் ?

'**வி**லைவாசி உயர்வை எதிர்த்துக் கர்நாடகத் தி. மு. க. போர்க்கொடி!' என்று தமிழ்நாட்டு தி. மு. க. தினசரி ஒன்று, நாலு காலம் தலைப்புப் போட்டுச் செய்தி பிரசுரித்திருப்பதைப் பார்த்தால் ஏதோ மைசூரில் மட்டும் தான் விலைவாசிகள் ஏறியிருப்பது போலவும் தமிழ் நாட்டில் விலைவாசிகள் மிக மிகப் படு மலிவாகி விட்டது போலவும் நமக்கெல்லாம் தோன்றுகிறது. ஆனால் உண்மை நிலை என்ன?

தமிழ் நாட்டில் ஏறாத விலைவாசியா மைசூரில் மட்டும் ஏறிவிட்டது? தமிழ் நாட்டில் தி. மு. க. ஆளும் கட்சியாக இருக்கிறது. மைசூரில் அப்படி இல்லை. அதனால்தான் மைசூரில் மட்டும் விலைவாசி ஏறியிருப்பதாகக் கூறிக் கிடுகிடு போராட்டம் நடத்தப் போகிறார்களாம் கர்நாடக தி. மு. க. வினர்.

## சென்னையில் குடிநீர் வறட்சி

**இ**ன்னும் ஒரு வார காலத்தில் சரியான மழை ஏதும் இல்லாத பட்சத்தில் சென்னை நகரில் குடிதண்ணீர் நிலை மோசம் அடையும் என்றும் 3000 குழாய்க் கிணறுகள் வரை அமைத்து நிலைமையைச் சமாளிக்க வேண்டியிருக்கும் என்றும் சென்னை மாநகராட்சி ஆணையாளர் அறிவித்திருக்கிறார். இப்படி முன்பு ஒருமுறை நகர் எங்கும் அமைக்கப்பட்ட குழாய்க் கிணறுகள் மூன்றும் நாளே காணாமல் போனது பலருக்கு நினைவிருக்கும். ஆகவே இம்முறையாவது கவனமாக எல்லா இடங்களிலும் காணாமல் போகாதபடி குழாயை நடுவார்கள் — அவை தண்ணீரும் தரும் — மக்கள் பயனடைவார்கள் என நம்புவோமாக.

## என்ஜினீயரிங் கல்லூரியில் சரிவு

**செ**ன்னை கிண்டியில் உள்ள என்ஜினீயரிங் கல்லூரியில் புதிய டிசைனில் கட்டப்பட இருந்த ஒரு கட்டிடத்துக்கான காங்கிரீட் ரூஃப் (மேற் பகுதி) சரிந்து ஏழுபேர் மரணமடைந்திருக்கிறார்கள். என்ஜினீயரிங் கல்லூரியில்தான் கட்டிடம் கட்டும் கலையையே சொல்லிக் கொடுக்கிறார்கள். அங்கேயே கட்டிடம் சரிந்து விட்டதைக் கண்டு வியப்பது தவிர வேறெதுவும் செய்வதற்கில்லை. சரிவு நடந்ததைப் பற்றி, வெளிநாட்டு பாணியிலான இந்த டிசைனை உள்ளூர்ப் பொருள்களைக் கொண்டு கட்டியது சரியில்லை என்றும், சிமெண்ட் — மணல் கலவை சரியில்லை என்றும் பல காரணங்கள் கூறப்படுகின்றன. எது எப்படி இருந்தாலும் கட்டிடம் சரிந்துபோன இடத்தைப் பற்றித் தொடர்புபடுத்தி நினைத்தால் இது வேடிக்கையோடு வேதனையையும் சேர்த்து அளிக்கக்கூடிய ஒரு சம்பவமாகவே தோன்றுகிறது. ஒருவேளை எப்படிக் கட்டடம் கட்டக் கூடாது என்று சொல்லிக் கொடுத்திருப்பார்களோ ?

---

### மூன்று நலன் ஒன்றுகிறது!

சென்னை, தியாகராயநகரில் உள்ள சிவ-விஷ்ணு ஆலயத்தைப் போல், கீழ்ப்பாக்கம் அழகப்பா நகரில் உள்ள விஷ்ணு-சிவ ஆலயம் நாள்தோறும் சீரும் சிறப்பும் பெற்று வருகிறது. பிரசன்ன வேங்கடேசுவரரும், சோமசுந்தரேசுவரரும் குடிகொண்டுள்ள இந்த ஆலயத்தில் இடைவிடாமல் சத்கதைகள் நடத்திவரத் திட்டமிடப்பட்டுள்ளது பாராட்டுக்குரிய விஷயம். தற்போது சுமார் ஒரு மாத காலமாக ஸ்ரீ டி. எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் மகாபாரத காலட்சேபம் அற்புதமாக நடத்தி வருகிறார். திவ்விய சரிதங்களைப் பரப்பும் புண்ணியத்தோடு இதில் மிகுதியாகக் கிடைக்கும் திரவியத்தைக் கொண்டு ஏழை மக்களுக்காகக் கல்யாண மண்டபம் எழுப்புகிற நற்பணிக்கும் திட்டமிட்டிருக்கின்றனர். சிவ-விஷ்ணு தரிசனம், அரிய ஹரிகதா சிரவணம், ஏழைக் கல்யாணத்துக்கு உதவும் புண்ணியம் என்ற மூன்று பழங்களை ஒரே வீச்சில் தமதாக்கிக் கொள்ளும் வாய்ப்பு ஆஸ்திகர்களுக்குக் கிடைத்திருக்கிறது. நேரில் கலந்துகொள்ள இயலாதோரும் பொருளுதவியை ஸ்ரீ பிரசன்ன வேங்கடேசுவர எண்டோமெண்ட் சொஸைடி, கோயில் தெரு, அழகப்பா நகர், கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்.



# சொல்லுக்கும் பொருளுக்கும் மூலம் இறைவனே

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

'நம்முடைய கண்ணுக்குத் தெரிவதும் காதுக்குக் கேட்பதுமே உண்மை. இதைத் தவிர வேறு உண்மை கிடையாது. புராணங்களில் சொல்லி இருப்பதெல்லாம் பொய் என்று நினைப்பது மிகவும் தப்பு. இப்போது நம் கண்ணுக்குத் தெரிகிற வஸ்துக்களின் அளவை நம் கண்ணிலுள்ள லென்ஸினால் நிர்ணயித்துக் கொள்கிறோம். இந்த லென்ஸ் பெரியதாகவோ சிறியதாகவோ இருந்தால் நாம் பார்ப்பனவற்றின் அளவும் அதைப் பொறுத்து மாறித்தான் தெரியும். நம்முடைய லென்ஸுக்குள் பிடிபடாத ஒளிகளும் இருக்கக் கூடும். நம்முடைய காதில் உள்ள டமாரத்துக்குப் (drum) பிடிபடாத ஒலிகளும் இருக்கக் கூடும். நமக்குத் தெரிவதையும் கேட்பதையும் தவிர பிரபஞ்சத்தில் ஏதுமே இருப்பதற்கில்லை என்று நாம் எப்படிச் சொல்ல முடியும்? தெய்விக சக்திகளைப் பெற்ற மகாபுருஷர்கள் ஞானக் கண் கொண்டு நமக்குத் தெரியாத திவ்வியக் காட்சிகளைப் பார்த்து அந்தத் தெய்வ மூர்த்திகளை வர்ணிக்கிறார்கள். நமக்குக் கேளாத திவ்விய சப்தங்களைக் கேட்டு மந்திரங்களாக்கித் தந்திருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட மகான்கள் இந்தப் பிரபஞ்சத்தின் இயக்கம் முழுவதையும் பரமேசுவரனின் நாட்டியமாகவே பார்க்கிறார்கள். அதுதான் நடராஜரின் நடனம். ஆடிக்கொண்டிருக்கிற நடராஜனிடமிருந்துதான் சகல சப்தங்களும் பிறக்கின்றன.' நடராஜா வெகு வேகமாக நர்த்தனம் பண்ணுகிறார். நிறுத்துகிற சமயத்துக்கு முந்தி ஜடை விழுதுகள் பக்கவாட்டில் இருபுறமும் நீட்டி நிற்கின்றன. சலனத்தில் உள்ள வஸ்துவை இந்தக் காலத்தில் 'ஸ்நாப்-ஷாட்' என்று போட்டோ பிடிக்கிறார்கள் அல்லவா? அதுபோல் இந்த ஜடை இருபுறமும் நீட்டிக் கொண்டிருக்கும் அவசரத்தைத் தெய்வச் சிற்பி அப்படியே நடராஜ விக்கிரகமாகப் பண்ணி விட்டார். இது நம் கண்ணுக்குத் தெரிகிற ஸ்வாமியின் ஸ்வரூபம்.

நம் காதுக்குப் புலனாகிய சப்தப் பிரபஞ்சமும் அவரிடமிருந்தே தோன்றியது. நடராஜர் கையில் உடுக்கை இருக்கிறது. அது குடுகுடுப்பாண்டியின் உடுக்கையை விடப் பெரியது. மாரியம்மன் கோயில் பூஜாரி வைத்திருப்பதை விடச் சிறியது. இந்த உடுக்குக்கு டக்கா என்றும் டமருகம் என்றும் பெயர். நாட்டியம் முழுவதிலும் பலவிதமாக ஆடி முடிகிற சமயத்தில் ஜடை விரித்து நின்றது போல், இந்த உடுக்கு, நாட்டியம் முழுதும் பாத தாளத்தை அநுசரித்துச் சப்தித்துவிட்டு, ஆடலை நிறுத்தினை வேகத்தில் படபடவென்று ஒரு சாப்புத் தொனியை ஒலித்தது. ஸ்வரூபத்தை விஸ்வகர்மா விக்கிரகமாக வடித்தது போல் இந்தச் சாப்புத் தொனியை அப்படியே கிரகித்து நந்திகேசுவரர் ''மகேசுவர சூத்திரம்'' என்று பெயரிட்டார். அந்தச் சாப்புத் தொனியில் பதினாறு சப்தத் தொகைகள் இருந்தன. அவை 'அ இ உண்' என்று தொடங்கி 'ஹல்' என்று முடியும்.

இந்த ஒலிகளையே வியாகரணத்துக்கு—அதாவது மொழி இலக்கணத்துக்கு — மூலமாக வைத்துப் பாணினி மகரிஷி அஷ்டாத்தியாயி என்ற நூலை எழுதினார்.

வேதங்கள் நான்கு. அதன் அங்கங்கள் ஆறு. மீமாம்சை, நியாயம், புராணம்; தர்ம சாஸ்திரம் இந்தப் பதினான்குமே நமது ஸநாதன மதத்தின் ஆதார நூல்கள். இவற்றை சதுர்த்தச (பதினான்கு) வித்யாஸ்தானம் என்பர். இதற்கு ஏற்றாற்போல் சர்வ வித்தைகளுக்கும் ஈசுவரனான நடராஜாவின் டமருகத்துக்கும் பதினாலு சப்தக் கோவைகளே வந்தன. இவை 'அ'வில் ஆரம்பித்து 'ல்'—லோடு முடிவதாகச் சொன்னேன். இதனால் 'அல்' என்றாலே இலக்கண சாஸ்திரப்படி எல்லா எழுத்துக்களையும் குறிக்கும். இதில் குறிப்பிட வேண்டிய அம்சம் இந்த 'அல்' எல்லா பாஷைகளிலும் இருக்கிறது. உருதுவில் 'அலிப்' என்பது முதல் எழுத்து. கிரீக்கில் 'ஆல்பா' என்பது முதல் எழுத்து. 'ஆல்பபெட்' என்று ஆங்கிலத்தில் சொல்வதும் இந்த 'அல்'லை வைத்துத்தான். இப்படியாக சகல பாஷைகளும், சகல சப்தங்களும் ஈசுவரனிடமிருந்தே பிறந்திருக்கின்றன.

இதைப் பற்றி யக்ஞ நாராயண தீக்ஷிதர் சமத்காரமாக ஒரு சுலோகம் செய்திருக்கிறார். 'பாணி' என்றால் கை. 'நாதம்' என்றால் ஒலி. 'பாணினி நாதம்' என்றால் (நடராஜர்) கையால் செய்த ஒலி என்று அர்த்தம். அதுவே 'பாணினி' மகரிஷி செய்த நாத சாஸ்திரமாயிற்று. வியாகரணத்துக்கு பாஷ்யம் செய்தவர் பதஞ்சலி. இவர் ஆதிசேஷ அவதாரம். ஆதிசேஷன் நடராஜரின் காலைப் பாதசரமாகச் சுற்றியிருக்கிறார். நடராஜாவின் கையிலுள்ள உடுக்கிலிருந்து சப்தம் வந்தது. அவரது காலில் உள்ள பதஞ்சலி அதற்கு விளக்கம் தந்திருக்கிறார். இப்படிக் கவி சொல்கிறார்.

இதன் உட்பொருள் சப்தம், அதன் அர்த்தம் இரண்டுக்கும் ஈசுவரனே மூலம் என்பதேயாகும்.

# சீஸ்லிங்குகள்! சாப்பிடுங்கள்! சுவைத்து மகிழுங்கள்!
# சீஸின் நறுமணம், அலாதி ருசியே அதன்குணம்!
# கரகரப்பு மிக்கது, மொரமொரப்பானது!

இதைத் தவிர பார்லே வழங்கும் இன்னும் நான்கு சுவையிக்க பிஸ்கெட்டுகள் இதோ!

**ஜெ:ஃப்ஸ்**—செஞ்சையன்னும் நறுமணம்,
வேஃபர் போன்ற மென்மையம்!

**ஓர்லே**—அருமையான ருசி,
அபாரமான கரகரப்பு!

**ஃபனியன்ஸ்**—ருசியில் வெங்காயம்,
புசிக்கப் பேரானந்தம்!

**ஸ்பின்-எச்**—வெந்தியக் கீரை கூடியது,
பெருமகிழ்ச்சியுடன் படைத்திடலாம்!

**சில்லிங்ஸ்**—'சீஸ்' சுவையைப் பெற்றிடுவீர்,
பாராட்டுடனே பார்ட்டியில் படைத்திடுவீர்!






உங்களுக்காக, இந்தியாவில் முதன் முதலாக ஸேவரி ஸ்நாக் தயாரிப்பவர்கள்

everest/277h/PP Tam




## 28. கடல் பொங்கிற்று

ராகவன் அந்த அறையின் வாசற்படி வரையில் சென்று கதவுக்கு வெளியே எட்டிப் பார்த்தான். மச்சுப் படிகளில் சூரியா நிற்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டான். பிறகு ஜன்னல் வழியாக வீதியில் எட்டிப் பார்த்தான். சூரியா வீதியில் போய்க் கொண்டிருக்கக் கண்டான்.

திரும்பி வந்து தாரிணியின் முன்னால் நாடக பாத்திரத்தைப் போல் நின்று கொண்டு, ''தாரிணி! உன்னிடம் தனிமையில் நான் என்ன சொல்ல விரும்பினேன் என்பது உனக்குத் தெரியவில்லையா? உண்மையாகவே என் மனநிலையை நீ அறிந்து கொள்ளவில்லையா? அல்லது தெரிந்திருந்தும் தெரியாதது போல் பாசாங்கு செய்கிறாயா?'' என்று கேட்டான்.

''தங்களுடைய மனநிலை எனக்குத் தெரிந்திருந்ததானால், என்னுடைய மனமும் தங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் அல்லவா? அப்படியென்றால், பேச்சுக்கு அவசியமில்லையே? சொல்லுவதற்கும் கேட்பதற்கும் ஒன்றும் இராதே?'' என்றாள் தாரிணி.

''இல்லை; உன்னுடைய மனத்தை நான் அறியக் கூடவில்லை. தாரிணி! அப்படி ஒரு காலம் இருந்தது. உன்னுடைய மனத்தில் ஓர் எண்ணம் தோன்றுவதற்குள்ளே என்னுடைய மனத்தில் அது பிரதிபலித்தது. அவ்விதமே என் மனமும் உனக்குத் தெரிந்திருந்தது. நான் நினைப்பேன்; அதை நீ சொல்லுவாய். நீ நினைப்பாய்; அந்த க்ஷணமே அதை நான் காரியத்தில் செய்வேன். இப்போது அப்படி இல்லை. உன் மனத்தை நான் அறிய முடியவில்லை. ஏதோ ஒரு மாயத் திரை உன் மனத்தை மூடிக் கொண்டிருக்கிறது. அது உன் மனத்தில் உள்ளதை நான் அறிய முடியாமல் தடை செய்கிறது. உனக்கும் எனக்கும் மத்தியில் அந்தத் திரையைத் தொங்கவிட்ட சண்டாளப் பாதகன் யார் என்று மட்டும் தெரிந்தால்...'' என்று ராகவன் சீறினான்.

''ஐயா! அந்த மாயத் திரையை வேறு யாரும் தொங்கவிடவில்லை. தாங்களேதான் சிருஷ்டி செய்து கொண்டிருக்கிறீர்கள். வேறு யாரோ என்று எண்ணிக் கோபித்துக் கொள்வதில் என்ன பயன்? பிரயாணம் கிளம்புவதற்கு முன்னால் எனக்கும் சில காரியங்கள் பாக்கியிருக்கின்றன. தயவு செய்து தாங்கள் சொல்ல விரும்பியதைச் சீக்கிரம் சொல்லிவிட்டால் நல்லது.''

''சொல்லுகிறேன்; பேஷாகச் சொல்லுகிறேன். சொல்லுவதற்குத்தான் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தேன். சுற்றி வளைத்து மூக்கைத் தொட நான் விரும்பவில்லை. மனத்தில் இருப்பதை அப்படியே பட்டவர்த்தனமாய்ச் சொல்லிவிடுகின்றேன். தாரிணி! நீ இல்லாமல் இனிமேல் ஒரு நிமிஷமும் என்னால் உயிர் வாழ முடியாது. மூன்று மாதங்களுக்கு முன்னால் டில்லி ரயில்வே ஸ்டேஷனில் உன்னை நான் பார்த்ததிலிருந்து என்னுடைய மனம் என் வசத்தில் இல்லை. தாஜ் மகாலில் உன்னைப் பார்த்து இரண்டு மூன்று நாட்கள் சேர்ந்து வசித்தது முதல் பித்துப் பிடித்தவன் போலாகிவிட்-

டேன். இந்த மூன்று மாத காலமாக எனக்கு எந்த வேலையிலும் மனம் செல்லவில்லை. ஆபீசிலும் சரியாக வேலை செய்கிறதில்லை. என் பேரில் அளவில்லாத அபிமானம் கொண்ட துரைகூட அடிக்கடி என் பேரில் குற்றம் கூறுகிறார். 'உனக்கு என்ன வந்துவிட்டது?' என்று கேட்கிறார். சிம்லாப் பயணத்தைக்கூட உனக்காகவே நான் நிறுத்திவிட்டேன். நீ டில்லியில் இருக்கும் போது நான் சிம்லாவுக்குப் போய் என்ன சந்தோஷத்தைக் காணப் போகிறேன் என்று எண்ணித்தான் போகவில்லை. சிம்லாவுக்குப் போனால் என்ன? காஷ்மீருக்குப் போனால் என்ன? நீ இல்லாமல் எங்கே போனாலும் எனக்கு எந்தவித சந்தோஷமும் கிட்டப் போவதில்லை. உனக்கு ஞாபகம் இருக்கிறதா, தாரிணி! நாம் கல்யாணம் செய்து கொண்டதும் 'ஹனிமூன்' கொண்டாடக் காஷ்மீருக்குப் போவதாகத் திட்டம் போட்டிருந்தோமே, அது ஞாபகம் இருக்கிறதா?....''

''நண்பரே! தங்களை ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன். தயவுசெய்து அந்தப் பழைய கதைகளை இப்போது சொல்ல வேண்டாம். அதையெல்லாம் ஒரு 'பழைய கனவு' என்று எண்ணி மறந்து விடுங்கள்.''

''நீ மறந்துவிட்டாய் தாரிணி! அது நன்றாய்த் தெரிகிறது. நீ அதிர்ஷ்டக்காரி; அதனால் மறந்துவிட்டாய். ஆனால் என்னால் மறக்க முடியவில்லை. அந்தப் பழைய நினைவுகள் என் மனத்தை ஓயாமல் அரித்து எடுத்துக் கொண்டிருக்கின்றன. அந்த நினைவுகள் எனக்கு இன்பத்தை அளிக்கின்றனவா, துன்பத்தை அளிக்கின்றனவா என்றே சொல்ல முடியவில்லை. பம்பாயில் ஒரு நாள் நாம் சௌபாத்தி கடற்கரையில் உலாவிவிட்டு மலபார் குன்றிலுள்ள தொங்கும் தோட்டத்துக்குப் போனோமே, அது உனக்கு நினைவிருக்கிறதா தாரிணி! அல்லது அதைக்கூட மறந்துவிட்டாயா? தோட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு ஒரு கொடி வீட்டின் கீழே கிடந்த பெஞ்சிப் பலகையில் உட்கார்ந்தோம். அந்தக் கொடி வீட்டின் மீது படர்ந்திருந்த கொடிகளிலே பல வர்ண இலைகளும் தளிர்களும் அடர்ந்து தழைத்திருந்தன. அந்த இலைகள், தளிர்கள், மலர்களோடு கலந்து பல வர்ணப் பட்டுப் பூச்சிகள் காணப்பட்டன. அந்தப் பட்டுப் பூச்சிகள் படபடவென்று சிறகுகளை அடித்துக் கொண்டு எழுந்து ஒரு நிமிஷம் பறப்பதும் மறுபடியும் உட்காருவதுமா யிருந்தன. பட்டுப்பூச்சிகளில் ஒன்று உன்னுடைய தோளின் மீது வந்து உட்கார்ந்தது. அதைப் பார்த்த நான், 'தாரிணி! இந்தப் பட்டுப் பூச்சியைப் பார்! உன்னை ஒரு பூங்கொடி என்று எண்ணிக் கொண்டு வந்து உட்கார்ந்திருக்கிறது. ஆனால் அது அவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டதாகச் சொல்ல மாட்டேன்!' என்றேன். உடனே நீ உன்னுடைய உடம்பைச் சிலிர்த்தாய். பட்டுப் பூச்சி பறந்து போயிற்று. 'பூங்கொடி என்பது ரொம்பப் பொருத்தம். இப்போது நீ உடம்பைச் சிலிர்த்தபோது தென்றல் காற்றில் பூங்கொடி அசைவதுபோலவே இருந்தது' என்றேன். அதற்கு, நீ 'தென்றல் காற்றோடு போயிற்றே? புயற்காற்றாயிருந்தால் கொடியின்பாடு ஆபத்துதான். கவிஞர்கள் பெண்களைக் 'கொடி' என்று வர்ணிப்பது ஒன்றும் எனக்குப் பிடிப்பதில்லை. கொடியைப் போல் அவ்வளவு பலவீனமாக இருந்து விட்டால் இந்த உலகத்தில் பெண்கள் எப்படிச் சுதந்திரமாக வாழ முடியும்?' என்று கேட்டாய். 'பெண்கள் சுதந்திரமாக இருக்க முடியாதுதான். ஆனால் பெண்களுக்குச் சுதந்திரம் எதற்காக? கொடியைத் தாங்குவதற்கு மரம் இருக்கும் போது கொடி எதற்காகத் தனித்து நிற்க வேண்டும்?' என்று நான் சொன்னேன். அதற்கு நீ, 'என்னை வேணுமானால் கொடி என்று சொல்லுங்கள்; செடி என்று வேணுமானாலும் சொல்லுங்கள். ஆனால் உங்களை மரம் என்று சொல்லிக் கொள்ள வேண்டாம்' என்றாய். 'உன்னைப் போன்ற ஒரு கொடியைத் தாங்கும் பாக்கியம் கிடைத்தால் நான் இந்த நிமிஷமே மரமாகிவிடத் தயார். என்ன சொல்கிறாய்?' என்றேன் நான். 'ஜாக்கிரதை! அருகில் நெருங்க வேண்டாம். உங்களை மரமாகும்படி சபித்துவிடு





வேன் !' என்றாய் நீ. 'எங்கே! சபித்து விடு ! உன் சக்தியைப் பார்க்கலாம்' என்று நான் கூறினேன். நீ கோபம் கொண்டதாகப் பாசாங்கு செய்து என் முகத்தை உற்று நோக்கினாய். நானும் உன் முகத்தை உற்றுப் பார்த்தேன். அப்படியே சிறிது நேரம் அசையாமல் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டிருந்தோம். நேரமாக ஆக, நம்முடைய முகங்கள் நெருங்கி வந்தன. முகத்தை முகம் பார்ப்பதற்குப் பதிலாகக் கண்களைக் கண்கள் வெகு சமீபத்தில் நின்று உற்றுப் பார்த்தன. கடைசியாக நீ தோல்வியுற்றாய். சட்டென்று எழுந்து நின்று, 'இந்த மரம் பொல்லாத மரமாயிருக்கிறது. நின்ற இடத்தில் நிற்காமல் நெருங்கி நெருங்கி வருகிறது!' என்று சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரித்தாய். இருவரும் கைகோத்துக் கொண்டு அவ்விடமிருந்து கிளம்பினோம். மலபார் குன்றின் தோட்டத்திலிருந்து சாலையில் இறங்கிய போது அஸ்தமித்துவிட்டது. கீழே பம்பாய் நகரின் லட்சக்கணக்கான தீபங்கள் வானத்து நட்சத்திரங்களுடன் போட்டியிட்டுக் கொண்டு ஜொலித்தன. உலகமே இன்ப மயமாகத் திகழ்ந்தது. அச்சமயத்தில் பக்கத்திலிருந்த ஒரு மாளிகையிலிருந்து கிராமபோன் கீதம் ஒன்று வந்தது. 'பிரேம

நகர் மே பனாலூங்கீ கர்' என்னும் பாட்டு அது. சினிமா நடிகர் ஸைகல் பாடியது. 'இந்தப் பாட்டு நமக்காகத்தான் பாடப்பட்டதுபோலிருக்கிறது. பிரேமை என்னும் நகரத்திலேயே நாமும் நம்முடைய வீட்டைக் கட்டிக் கொள்ளலாம்!' என்றேன் நான். தாரிணி! இதெல்லாம் உனக்கு நினைவிருக்கிறதா? நான் இப்போது சொன்ன பிறகாவது நினைவு வருகிறதா! அல்லது என்னவோ பைத்தியக்காரன் உளறுகிறான் என்று அலட்சியம் செய்து வேறு எதையாவது பற்றி எண்ணிக் கொண்டிருக்கிறாயா?''

இந்த நெடிய பேச்சைக் குறுக்கிடாமல் கேட்டுக் கொண்டு வந்த தாரிணியின் உள்ளம் கனிந்து போயிற்றோ என்னவோ, தெரியாது. பளிச்சென்று அவளால் பதில் சொல்ல முடியவில்லை. தயங்கித் தடுமாறிக் கூறினாள்: ''நீங்கள் சொல்லுவதையெல்லாம் கவனமாகக் கேட்டு வந்தேன். அவ்வளவும் எனக்கும் நினைவு இருக்கிறது. ஒன்றும் மறந்து போகவில்லை. ஆனால் அப்போது நாம் இருவரும் செய்த தவறு இப்போது எனக்குத் தெரிகிறது. **பிரேம நகரம்** என்பதாக உண்மையில் ஒன்று கிடையாது. அது வெறும் மாயா நகரம். கவிகளின் கற்பனைச் சித்திரம். பிரேம நகரம் என்பது உண்மையாக இருந்தாலும் அந்த நகரத்தில் வீடு கட்டிக் கொள்ள இப்போது நான் விரும்பவில்லை. அதற்குப் பதிலாகச் **சேவா நகரத்தில்** வீடு கட்டிக் கொண்டு வாழ விரும்புகிறேன். ராகவன்! நான் பார்த்ததையெல்லாம் நீங்கள் பார்த்திருந்தால், என்னுடைய அநுபவமெல்லாம் உங்களுக்கும் ஏற்பட்டிருந்தால், என்னைப் போலவே நீங்களும் நினைப்பீர்கள். பிரேமை, காதல் என்னும் பிரமைகளில் மனத்தைச் செலுத்த மாட்டீர்கள். இந்த உலகத்தில் வாழும் மக்களின் துன்பத்தை ஓர் அணுவளவேனும் நம்மால் குறைக்க முடியுமா என்று என்னைப் போலவே அல்லும் பகலும் சிந்திப்பீர்கள்.''

''தாரிணி! இது என்ன பேச்சுப் பேசுகிறாய்? உலகத்து மக்களின் துன்பத்தை உன்னாலும் என்னாலும் குறைத்துவிட முடியுமா? நீயும் நானும் கடவுளைவிடச் சக்தி வாய்ந்தவர்களா? கடவுளுடைய நியதியால் மனிதர்கள் இன்பமோ துன்பமோ அடைகிறார்கள். அவரவர்களுக்கும் தனித் தனியே கடவுள் வழி வகுத்து விட்டிருக்கிறார். அந்தந்த வழியில் அவரவர்களும் போய்த்தானே ஆகவேண்டும்? உலகத்தை நாம் சீர்திருத்திவிட முடியும் — உலகத்து மாந்தரின் துன்பத்தைக் குறைத்துவிட முடியும் — இன்பத்தைப் பெருக்கிவிட முடியும் என்று நினைப்பதெல்லாம் எவ்வளவு பெரிய அகம்பாவம்? அந்த மடையன் சூரியாவைப் போல் நீயும் பேசுகிறாயே? அவனிடந்தான் கற்றுக் கொண்டாயா?'' என்று நிதானத்தை இழந்து பதற்றமாகப் பேசினான் ராகவன்.

ஆனால் தாரிணி நிதானம் இழக்கவில்லை; பதற்றம் அடையவும் இல்லை. ''ஐயா! எதற்காக இவ்வளவு படபடப்பாய்ப் பேசுகிறீர்கள்? சூரியாவின் பெயரை இதில் இழுக்க வேண்டியதேயில்லை. நான் அவரைச் சந்திப்பதற்குப் பல நாளைக்கு முன்பே சில அநுபவங்களைப் பெற்றேன்; சில முடிவுகளுக்கு வந்தேன். கடவுள் சிருஷ்டித்த உலகத்தை அபிவிருத்தி செய்துவிடலாம் என்ற அகம்பாவத்தினாலோ, விதியை மாற்றிவிடலாம் என்ற அசட்டு நம்பிக்கையினாலோ நான் தொண்டு வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. துன்புற்றவர்களுக்குத் தொண்டு செய்வதிலேதான் என் மனம் இன்பத்தை அடைகிறது; நிம்மதியைக் காண்கிறது. வேறுவித வாழ்க்கையில் என் மனம் செல்லவில்லை. அதற்கு நான் என்ன செய்ய முடியும்? கடவுள் அவரவர்களுக்குத் தனித் தனியே வழிவகுத்து விட்டிருக்கிறார் என்று தாங்களே சற்று முன் சொன்னீர்கள். தங்களுக்கு வேறு வழியும் எனக்கு வேறு வழியும் ஆண்டவன் வகுத்திருக்கிறார். அவரவர்களுடைய வழியில்தானே அவரவர்கள் போக வேண்டும்? நம்முடைய வழிகள் வெவ்வேறு என்பதைத் தங்களை முதன் முதலில் சந்தித்த காலத்தில் நான் தெரிந்து கொள்ளவில்லை. அந்த நாளிலே ஏதோ ஒரு மாயத் திரை என் அறிவை மூடியிருந்தது. திரை விலகியதும் உண்மையைக் கண்டேன். தயவு செய்து மன்னித்து விடுங்கள். என்னை என் வழியில் போக விடுங்கள்.''

''ஒரு நாளும் முடியாது. உன்னை இப்போதுதான் மாயை வந்து மூடியிருக்கிறது. அந்த நாளில் நீ கண்டதுதான் உண்மை. உன்னுடைய வழி வேறு, என்னுடைய வழி வேறு என்பதும் தவறு. இந்து தர்மத்திலே புருஷனுடைய வழிதான் ஸ்திரீயின் வழி. ஸ்திரீக்குத் தனி வழி கிடையாது.''

''அவ்விதம் பரிபூரணமாய் நம்பித் தங்களைத் தெய்வத்துக்கும் மேலாக மதித்துப் போற்றுகிற ஒரு பெண்ணைத் தாங்கள் மனைவியாகப் பெற்றிருக்கிறீர்கள். அது தங்களுடைய பாக்கியம். ராகவன்! கொஞ்சம் யோசித்

Lakmé

# லக்மே அய் மேக்-அப்

## மென்மையானது இளமைத் தோற்றம் தருவது

### கண்களுக்குப் புத்தழகு ஊட்டுவது.




**1** அகலமான மிருதுவான கண்களுக்கு—விரைவில் உலரும் **லக்மே அய்-லைனர்.** இது ப்ளாக் வெல்வெட், காபி பிரவுன், டவ் க்ரே வண்ணங்களில் வருகிறது. அய்-லைனர் பிரஷ் உபயோகியுங்கள்.

**2** **லக்மே அய்-ஷாடோ:** மென்மையான மனங் கவரும் சாயல்கள். ஃப்ளேம் ப்ளு, ஜேட் க்ரீன், லாவெண்டர்.

**3** **லக்மே ஃபோர்-இன்-ஒன் அய்-ஷாடோ,** நான்கு வண்ணங்கள் —நியூ விட், ஷேட்னிங் பர்ல் விட், உள்பட ஓர் அழகான மிக்ஸ் —அன்—மாட்ச் கேஸில்.

**4** நீண்ட, தடித்த, பட படக்கும் கண்ணிமை களுக்கு **லக்மே மஸ்காரா.** கறுப்பு, பழுப்பு—இரு வண்ணங்கள்.

**5** மெல்லிய உருவுள்ள கண்களுக்கு— மிருதுவான இறகு போன்ற புருவங்களுக்கு **லக்மே அய்-பென்சில்** உபயோகி யுங்கள். கறுப்பு வண்ணத்தில் இரு சைஸ்களில் கிடைக்கிறது.

ASP/L-103

பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும் பாதிவேலையைத்தான் செய்யும்

*

## இன்க்ரிமின் பெறுவீர்..

## உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்






*

**சேருவீர் இன்க்ரிமின் இதைத்தேடு... வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் வாழுடனே!**

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரதச் சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

◀ பெரிய குழந்தைகளுக்கு இரும்புச் சத்து அடங்கிய இன்க்ரிமின் ஸிரப் — 175 மிலி & 57 மிலி. இளம் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் — 10 மிலி.

# இன்க்ரிமின்*

**டானிக்** எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.




• அமெரிக்கன் ஸைனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC, 22 - 140 TM

துப் பார்த்துச் சொல்லுங்கள். என்னிடம் காதலைப் பற்றிப் பேசும் போது தங்களுக்குச் சீதாவின் நினைவே கிடையாதா? நிர்க்கதியாகத் தங்களையே நம்பி வந்திருக்கும் அந்தப் பேதைப் பெண் மீது உங்களுக்கு இரக்கம் கொஞ்சமும் இல்லையா? அவளுக்குத் துரோகம் செய்ய எப்படி உங்களுக்கு மனம் வருகிறது?''

''ஆ! துரோகத்தைப் பற்றியா பேசுகிறாய்? துரோகம் யாருக்கு யார் செய்தார்கள்? — எனக்கும் சீதாவுக்கும் சேர்ந்து நீ துரோகம் செய்தாய். தாரிணி! உன்னைப் பரிபூரணமாக நம்பியிருந்த என்னை நட்டாற்றில் விட்டுவிட்டுச் சென்னையிலிருந்து சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டுப் போனாய். தப்பர்த்தத்துக்கு இடமாயிருந்த ஒரு முட்டாள் கடிதத்தையும் விட்டுவிட்டுப் போனாய். அதுவும் வேண்டுமென்று நீ செய்த சூழ்ச்சிதானோ என்னவோ, தெரியாது. அதோடு உன் துரோகம் முடிந்ததா? இல்லை! அப்புறம் பீஹாரிலிருந்து பூகம்பத்தின் பிளவில் விழுந்து மாண்டாய் என்று நான் நம்பும்படியாகக் கடிதம் எழுதப் பண்ணினாய். இம்மாதிரியெல்லாம் நீ செய்த துரோகங்களினாலேதான் நான் சீதாவை மணக்கும்படி நேர்ந்தது....''

''நான் செய்தது துரோகமாகவே இருக்கட்டும். தக்க காரணத்தோடு நான் அவ்விதம் செய்தேன். ஆனால் சீதாவையும் தாங்கள் மற்றவர்களைப் போல் சாதாரணமாய்க் கல்யாணம் செய்துகொண்டு விடவில்லையே? வேறு ஒரு பெண்ணைப் பார்க்கப் போன இடத்தில் சீதாவைப் பார்த்து....''

''ஆமாம்; இவளைப் பார்த்து மோகித்துக் கல்யாணம் செய்து கொண்டுவிட்டேன்! அப்படி உன்னிடம் சீதா பெருமை அடித்துக்கொண்டாளாக்கும்! இதிலிருந்து அவளுடைய பட்டிக்காட்டுத்தனத்தை நீயே தெரிந்து கொள்ளலாம். தாரிணி! சில சமயம் சீதாவை நான் வைஸ்ராய் மாளிகைப் பார்ட்டிகளுக்கும் மற்றும் பெரிய உத்தியோகஸ்தர்கள் கொடுக்கும் பார்ட்டிகளுக்கும் அழைத்துப் போகிறேன். அழைத்துப் போய்விட்டு ஒவ்வொரு நிமிஷமும் நரக வேதனையை அநுபவிக்கிறேன். எந்தச் சமயத்தில் அவள் என்ன தவறு செய்வாளோ? பிளேட்டைக் கீழே போட்டு உடைத்து விடுவாளோ, மேலே கையைக் கொட்டிக் கொண்டு விடுவாளோ, யாரிடம் என்ன உளறிவிடுவாளோ என்று ஒவ்வொரு நிமிஷமும் எனக்குக் கதிகலக்கமாகவே இருக்கும். அப்போதெல்லாம் உன்னை நினைத்துக் கொள்

வேன். நீ மட்டும் என்னோடு புது தில்லிப் பார்ட்டிகளுக்கு வந்தால்....''

''நீங்கள் நினைப்பது முற்றும் தவறு. பார்ட்டிகளில் நடந்து கொள்வதில் சீதாவை விட நான் மோசமாயிருப்பேன். நாகரிக நடை உடை பாவனை ஒன்றுமே எனக்குத் தெரியாது...''

''உன் விஷயம் வேறு தாரிணி! பார்ட்டிகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை ஒரே நாளில் உனக்கு நான் கற்றுக் கொடுத்து விடுவேன். அப்படியே நீ ஏதாவது தவறு செய்தாலும் எனக்கு அதனால் அவமானம் ஏற்படாது. சீதா ஏதேனும் தவறு செய்தால் அதைப் பார்த்து நாலு பேர் சிரிப்பார்கள். நீ செய்தால் அதுதான் புது நாகரிகம் என்று நினைத்துக் கொள்வார்கள். காதில் அணிந்து கொள்ளும் லோலக்கை நீ மூக்கில் தொங்கவிட்டுக் கொண்டு ஒரு நாள் வந்தால் மறுநாள் எல்லோரும் அப்படியே செய்வார்கள். நீ புடவைத் தலைப்பில் மூயைக் கொட்டிக் கொண்டால் அதைப் பார்த்து அவ்வளவு பேரும் மூயைக் கொட்டிக் கொள்வார்கள். இதெல்லாம் அவரவர்களுக்கு இறைவன் அளித்த பாக்கியம். ஒருவரைப் பார்த்து ஒருவர்...''

''அதைத்தான் நானும் சொல்கிறேன். சீதா தாங்கள் இழுத்த இழுப்புக்கு வருகிறாள். பார்ட்டிகளுக்கும் வருகிறாள். நானோ பார்ட்டிகளுக்கே வரமாட்டேன். இத்தனைக்குப் பிறகும் என்னுடைய இயல்பை நீங்கள் அறிந்து கொள்ளவில்லை; நாம் சேர்ந்து வாழ முடியும் என்று சொல்கிறீர்கள்.''

''தாரிணி! அப்படி நீ பிடிவாதம் பிடித்தால் நான் பின்வாங்கி விடுவேன் என்று நினையாதே. 'இந்த உத்தியோகத்தை விட்டுவிடுங்கள்; ஏதோ ஓர் ஆசிரமத்துக்குப்போவோம், வாருங்கள்' என்று சொல்லு. அடுத்த நிமிடம் விட்டு விட்டு வரத் தயாராக இருக்கிறேன். என்னுடைய காதலின் ஆழத்தை நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லை. உனக்காக எப்படிப்பட்ட தியாகத்தையும் செய்ய நான் தயார்! எனக்கு நீ என்ன சோதனை வேணுமானாலும் வைத்துப் பார்க்கலாம்.''

''தங்களுக்கு நான் ஏற்படுத்தக்கூடிய சோதனை ஒன்றே ஒன்றுதான். என் பேரில் தங்களுக்கு அபிமானம் உண்டு என்பதில் லவலேசமும் உண்மை இருந்தால் தங்கள் மனைவி சீதாவை அன்புடன் ஆதரித்துக் காப்பாற்றுங்கள். அந்தப் பேதைப் பெண்ணைக் கைவிட்டு விடாதீர்கள்.''

''அவளைக் கைவிட்டு விடுவதாக யார் சொன்னார்கள்? அந்த எண்ணம் எனக்கு லவலேசமும் இல்லை. அவளும் இருந்து விட்டுப் போகட்டும்.''

''வைதிக காரியங்களுக்குத் தாலி கட்டிய மனைவி இருந்துவிட்டுப் போகட்டும்; நான் ஆசைநாயகியாக இருக்கலாம் என்கிறீர்களாக்கும்!''

''சீச்சீ! என்ன வார்த்தை சொன்னாய்? அவ்வளவு கீழ்மகன் நான் அல்ல, தாரிணி! உன்னையும் நான் கல்யாணம் செய்து கொள்ளத் தயாராக இருக்கிறேன். அதனால் என்ன ஏச்சு வந்தாலும் என்ன பேச்சுப் புறப்பட்டாலும், எவ்வளவு அவமானத்துக்கு நான் உட்பட வேண்டியிருந்தாலும் பாதகமில்லை.''

''என்ன? என்ன? தயவுசெய்து இன்னொரு தடவை சொல்லுங்கள்!'' என்று அடங்கா வியப்புடன் கேட்டாள் தாரிணி.

''உன்னையும் அக்னி சாட்சியாகக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொல்கிறேன். இந்த நிமிஷம் நீ உன்னுடைய சம்மதத்தைச் சொல்ல வேண்டியதுதான்; அடுத்த நிமிஷத்தில் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்து விடுகிறேன்'' என்றான் ராகவன்.

''ராகவன்! இது விஷயத்தில் உங்களுடைய முதல் மனைவியின் அபிப்பிராயம் எப்படி இருக்கும் என்று யோசித்தீர்களா?'' என்றாள் தாரிணி. அவளுடைய பேச்சில் இப்போது கடுமை தொனித்தது. போகப் போக அந்தக் கடுந்தொனி அதிகமாயிற்று.

''அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஒருவருக்காக இன்னொருவர் தன்னுடைய வாழ்க்கை இன்பத்தையே பறிகொடுத்து விட முடியுமா? மேலும் அவளை நான் அடியோடு வேண்டாம் என்று சொல்லிவிடவில்லையே? அவளும் இருந்து விட்டுப் போகட்டும்!'' என்றான் ராகவன்.

''ஐயோ பாவம்! ரொம்பப் பெரிய மனசு செய்து சொல்கிறீர்கள். இன்னொரு விதமாக யோசனை செய்து பாருங்கள். உங்களைப் போல் சீதா இன்னொரு புருஷனைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பினால், நீங்கள் சம்மதிப்பீர்களா?''

''சீச்சீ! என்ன வார்த்தை சொல்கிறாய், தாரிணி! அது இந்து தர்மத்துக்கு விரோதமான காரியம்.''

''புருஷர்களை மட்டும் இந்து தர்மம் இஷ்டப்படி செய்யலாம் என்று தண்ணீர் தெளித்து விட்டிருக்கிறதா?''

''ஆமாம்; நீயே யோசித்துப் பாரேன்! இந்து தர்மம் புருஷர்கள் பல




—நீரில் கலந்த
அழுக்கு
எதையும் ஏற்காத,
அருமையான
ஸ்டெயின்லெஸ்
பருத்தித் துணி

**பின்னி**யின்
படைப்பு

BSCM-1A/72TAM

தார மணம் செய்ய இடம் கொடுத்திருக்கவில்லையா? மகாவிஷ்ணுவுக்கும் சுப்பிரமணியருக்கும் இரண்டிரண்டு மனைவிகள் உண்டல்லவா? கிருஷ்ண பகவானே எட்டுப் பேரை மணந்து கொண்டார்...''

''ராகவன்! அவர்கள் தெய்வங்கள்; என்ன வேண்டுமானாலும் செய்யலாம். கிருஷ்ண பகவான் எட்டுப் பேரை மணந்தார் என்பது உண்மைதான். ஆனால் அதே கிருஷ்ணன் துரியோதனனுக்கு முன்னால் விசுவ ரூபத்தைக் காட்டினார். சக்கராயுதத்தினால் சூரியனையே மறைத்தார். இதெல்லாம் உங்களால் முடியுமா? இராமாவதாரத்தைப் பாருங்கள். இராமாவதாரத்தில் பகவான் மனிதர்களைப் போல நடந்து காட்டினார். ராமர் சீதை ஒருத்தியைத் தானே மணந்தார்? தங்களுடைய பெயர் ராகவன். தங்கள் மனைவியின் பெயர் சீதா. இராமர் சீதையைக் காப்பாற்றியதுபோல் உங்கள் சீதாவை நீங்கள் காப்பாற்றுங்கள். இன்னும் ஒரே ஒரு விஷயம் சொல்லுகிறேன். உங்கள் மனைவி எப்பேர்ப்பட்டவள் என்பதை நீங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. உலகமெல்லாம் தேடினாலும் அவளைப் போன்ற பெண் கிடைப்பது துர்லபம். உங்களிடம் அவளுக்குள்ள அன்பு இமயமலையைக் காட்டிலும் பெரியது. சப்த சமுத்திரங்களைவிட விசாலமானது. அவளை அன்புடன் பேணி ஆதரியுங்கள். அதுதான் உங்களுடைய வாழ்க்கை தர்மம்; உங்களுக்கு நன்மை தருவதும் அதுதான்.''

''இந்தத் தர்மோபதேசமெல்லாம் எனக்கு வேண்டாம். ஒன்று சொல்கிறேன், கேள்! சீதாவை விவாகரத்து செய்து அவளுக்கு இஷ்டம் இருந்தால் வேறு யாரையாவது கல்யாணம் செய்து கொள்ளட்டும் என்று விட்டு விடுகிறேன். அப்போது நீ என்னை மணக்கச் சம்மதிப்பாயா?''

''சீதா உங்களை விட்டுப் போக மாட்டாள். உங்கள் காலடியிலேயே விழுந்து கிடப்பாள் என்ற தைரியத்தினால் இப்படிச் சொல்கிறீர்கள். சீதா விஷயம் இருக்கட்டும். உங்கள் தாயாரிடம் ஒரு சமயம் நீங்கள் பய பக்தியோடு இருந்தீர்கள். அவர் தங்களுடைய காரியத்தைப் பற்றி என்ன நினைப்பார் என்று யோசித்தீர்களா?''

''என் தாயார் தனக்குப் பணிவுள்ள சாதுவான நாட்டுப் பெண் வேண்டும் என்று சொன்னாள். அத்தகைய நாட்டுப்பெண் அவளுக்குக் கிடைத்துவிட்டாள். இன்னும் என்ன அவளுக்கு










வேண்டும்? என் தாயாரிடம் எனக்கும் பக்தி உண்டுதான். அதற்காக அவள் என்னை எப்போதும் அடிமையாக்கிவைத்திருக்க முடியாது. என்னுடைய வாழ்க்கையை அடியோடு பாழாக்க அவளுக்கு உரிமை கிடையாது. தாரிணி! கடைசியாக நான் ஒன்று சொல்கிறேன். அதைக் கேள். நாளைக்கு நீ லாகூருக்குப் புறப்படுவதை நிறுத்திவிடு. நம்முடைய விஷயத்தைப் பற்றி இன்னும் நன்றாக யோசித்து முடிவு செய். பிரயாணம் கிளம்புவதாயிருந்தால் நாம் இருவரும் கிளம்பலாம். உன்னை நான் காஷ்மீருக்கும் டேராடூனுக்கும் டார்ஜீலிங்குக்கும் உதகமண்டலத்துக்கும் அழைத்துப் போகிறேன். அப்புறம் லண்டனுக்கும் பாரிஸுக்கும் வியன்னாவுக்கும் நேப்பிள்ஸுக்கும் அழைத்துப் போகிறேன். ஐரோப்பாவைச் சுற்றிப் பார்த்த பிறகு அமெரிக்காவுக்கும் போவோம். ஸான் பிரான்ஸிஸ்கோ, நியூயார்க், வாஷிங்டன், லாஸ் ஏஞ்செல்ஸ் முதலிய இடங்களுக் கெல்லாம் போகலாம். என்ன சொல்கிறாய், தாரிணி!''

''ஆரம்பத்தில் நான் சொன்னதைத்தான் திரும்பச் சொல்கிறேன். தங்களுடைய வாழ்க்கை இலட்சியம் வேறு. என்னுடைய வாழ்க்கை லட்சியம் வேறு. ஒரு நாளும் நம்முடைய லட்சியங்கள் ஒன்று சேர முடியாது. தாங்கள் குறிப்பிட்ட இடங்களுக்கெல்லாம் சீதாவை அழைத்துக் கொண்டு போங்கள்; அதுதான் நியாயம். அதுதான் உங்களுக்கு க்ஷேமம்'' என்றாள் தாரிணி.

ராகவன் சிறிது நேரம் திகைப்புடன் தாரிணியைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவனைப் போல் ஒரு கோபச் சிரிப்புச் சிரித்தான்.

''தாரிணி! நீ ஏன் இப்படிப் பேசுகிறாய் என்பது எனக்குத் தெரியும்! யாருடைய மோக வலையிலே சிக்கி என்னை நீ நிராகரிக்கிறாய் என்பதையும் அறிவேன். அந்த ராஸ்கல் சூரியாவின் வேலைதான் இவ்வளவும். எனக்கு ரிவால்வர் லைசென்ஸ் சில நாளைக்கு முன் கிடைத்திருக்கிறது...''

''ராகவன்! வீண் அவதூறு பேசி உங்கள் நாவை அசுத்தப் படுத்திக் கொள்ள வேண்டாம். என்னைப் பயமுறுத்தவும் முயல வேண்டாம். பீகார் பூகம்பத்தைப் பார்த்த பிறகு எனக்குச் சாவு என்றால் பயமே கிடையாது.''

''மறுபடியும் நான் சொன்னதை நீ தவறாக எடுத்துக் கொண்டாய். உன்னைச் சுட்டுக்கொல்லப் போவதாக நான் சொல்லவில்லை. என்னை நானே துப்பாக்கியால் சுட்டுக் கொண்டு சாகப் போவதாகச் சொல்ல எண்ணினேன்.''

'' என்னுடைய சாவைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை; மற்றவர்களுடைய சாவைப் பற்றியும் நான் கவலைப்படப் போவதில்லை. பகவத் கீதை என்ன சொல்லுகிறது? உடம்பைத்தான் கொல்லலாமே தவிர ஆத்மாவைக் கொல்ல முடியாது. எப்பேர்ப்பட்ட வஜ்ராயுதத்தினாலும் முடியாது.''

''தாரிணி! உன்னை இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. நீ பெண் அல்ல; ராட்சஸி. உன்னுடைய அழகு சூர்ப்பனகையின் அழகைப் போன்றது...இருக்கட்டும், பார்த்துக் கொள்கிறேன். நீயும் சூரியாவும் நாளைக்கு ரயில் ஏறிப் போவதைப் பார்த்து விடுகிறேன்!'' என்று சபதம் கூறிவிட்டு ராகவன் வெளியேறினான்.

அவன் அப்பால் போனதும் தாரிணியின் கண்களில் அதுகாறும் குமுறிக் கொண்டிருந்த கண்ணீர்க் கடல் பொங்கிப் பெருகியது. (தொடரும்)



# பூட்ஸ் வழங்கிடும் சாரு-இருமல் வரும்போது <u>உண்மையிலேயே</u> இதமளித்துச் செயலாற்றும் நோஸ்கபீன்* அடங்கிய இருமல் லாஸஞ்ஜ்(மாத்திரை)



சாருவை மெல்லுங்கள்.
தூக்கமோ,
மலச்சிக்கலோ வீரோ
விக்காமல் இருமலிலிருந்து
நிவாரணம் பெறுங்கள்.

*நோஸ்கபீன்—உலக சுகாதார ஸ்தாபனத்தால் இருமல் சிகிச்சைக்கு சிபாரிசு செய்யப்பட்ட நோஸ்கபீன் அதிக சக்தி வாய்ந்த பாதுகாப்பான இருமல் நிவாரணி. அது இருமல் ஏற்படும் கேந்திர ஸ்தானத்திலேயே நேரடியாகச் செயலாற்றுகிறது.

Boots

# சாரு

இருமலுக்கு நறுமணமுள்ள
சிகிச்சையளிக்கும் லாஸஞ்ஜ் (மாத்திரை)

CHERANA ANTI-COUGH LOZENGES

CMBC-43-203-Tam

# அரவிந்தர் தரும் அருமருந்து

டாக்டர் பி. நாகராஜராவ்

அண்மைக் காலத்தின் தலைசிறந்த மெய்ஞ் ஞானிகளில் அரவிந்தர் ஒருவர்.

1928-ல் நம் தேசியக் கவி தாகூர், அரவிந் தரைக் கண்டு பரவசப்பட்டு, ''உன்னிடம் இருக்கிறது ஆக்ஞை. . நீ சொல்; நாங்கள் காத்திருக்கிறோம், ஏற்றுக் கொள்ள. இந்தியா இனி உன் குரலால் பேசும்'' என்று கூறினார்.

ஆதியில் அரசியல் போராட்டத்தில் ஈடுபட் டிருந்த அரவிந்தரின் மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டி நடைபெற்ற மறக்க முடியாத வழக்கின் முடிவில், சித்தரஞ்சன்தாஸ் தம் முடைய பேச்சை இவ்வாறு முடித்தார். '' (ஆட்சியாளருக்கும் சுதந்திரப் போராட் டத்தினருக்கும் இடையே உள்ள) இந்த வேறு பாடு மறைந்த பின்னும், இந்தப் புரட்சி நின்ற பின்னும், இவர் (அரவிந்தர்) மறைந்து சென்ற பின்னும், இவர் நாட்டுப் பற்றுடைய புலவனென்றும், தேசிய தீர்க்கதரிசியென்றும், மனித இனத்தின் காதலனென்றும் பேசப்படு வார். மடிந்து மட்கிய பின்னும், இவர் குரல் இந்தியாவில் மட்டுமல்ல, கடலிலும் கடல் கடந்தும், இம்மண்ணெங்கும் எதிரொலிக் கும், மீண்டும் எதிரொலிக்கும்.''

இன்று இது ஓர் உண்மையாகி விருப்பதைக் காண்கிறோம்.

இன்று மேற்கத்திய, கிழக்கத்திய அறி ஞர்கள் பலர் அவருடைய சித்தாந்தத்தைப் பற்றி எழுதக் காண்கிறோம். 1910 ஏப்ரல் 4 முதல், 1950 டிசம்பர் 5 வரை அரவிந்தர் வாழ்ந்த பாண்டிச்சேரி இன்று அரவிந்த யோகத்தின் பயிற்சிக் களனாக விளங்குகிறது.

அரவிந்தர் கண்ட யோக முறையானது கூட்டு யோகம் அல்லது பூர்ண யோகம் என்று சொல்லப்படுகின்றது. அது ஒருவகையான ஒருமைக் கோட்பாடு (Monism). ஆனால் சங்கரர் சொல்வதைப் போன்றது அல்ல. சங்கரர் சொல்வது போல் பரம்பொருள் இயக்கமற்ற வெறும் விழிப்புணர்வு (Pure consciousness) மட்டும் அல்ல. பரம்பொருள் செழிப்புள்ளது ; அனைத்தையும் உள்ளடக்கி யது. அது சக்தியுடன் இயங்கிக்கொண்டிருக் கிற விழிப்புணர்வு வேகம் (Conciousness Force) என்கிறார் அரவிந்தர். அதற்கு மூன்று நிலைகள் உண்டு : 1. தூய தனித்துவம் (Pure Trancen-dence) 2. இயக்கம் (Dynamism) 3. வெளிப் படும் தோற்றம் (Manifestation)

மூன்றும் வெவ்வேறு நிலைகளில் தெய் வீகத்தை (Devine) எதிரொலிக்கின்றன.

சங்கரரின் அத்வைதம், தோன்றும் உலகை உண்மையென ஒத்துக் கொள்வதில்லை. அங்கே உலகின் நிலைக்கும், உண்மை நிலைக்கும் வேறு பாடு இருக்கிறது. சம்சார உலகை மறுப்பதன் மூலம், பிரம்ம நிலையை மனிதன் பெறுகிறான் என்பது சங்கரர் கொள்கை. நிரந்தரமாக நிலையாமல் மாறிக் கொண்டேயிருக்கும் உலகை நீக்கி, எப்போதும் மாறுதலின்றி நிரந்தரமாயிருக்கும் பரம்பொருளை அடைய வேண்டும் என்கிறார் சங்கரர். நிலைத்து நில்லா மாறுதல்களை நீக்கித்தான் பரம்பொருள் என்பதில்லை. இந்த முடிவுள்ள பொருட்களை யும் உள்ளடக்கிய செழித்த, முடிவற்ற ஒன்றே பரம்பொருள் என்கிறார் அரவிந்தர்.

அரவிந்தர் மேலும் சொல்கிறார்: அறுதி யற்ற ஒன்றை நினைந்து பார்ப்பது அறிவால் இயலாத ஒன்று. மனித அறிவு செயல்படும் போது சிதைந்தே செயல்படுகின்றது. அதற்கு ஏகப்பட்ட தடைகள் உண்டு. ''இந்த அறிவு மெய்ப்பொருளின் (Truth) சிதைந்த கூறு பட்ட நிலைகளைத்தான் காண முடியுமே தவிர, முழுமையையும் காண முடியாது. அது நமக்கொரு பூரண இசைவு கொண்ட அநுப வத்தை (Integral Experience) தர முடியாது. மனித அறிவின் இயல்பும், முடிவுகளும் முழு மையாக ஏற்றுக் கொள்ளக் கூடியனவல்ல. அது அறிய முற்படும் பொருள்களுக்கு ஏற்றாற் போல், வேறுபாடுகள் உண்டு. மனித அறிவு நேரடி ஞானத்தைத் (Immediate Knowledge) தர முடியாது. நேரடி அநுபவமும் (Immediate Experience) தர முடியாது. பரம் பொருளை அடைய தீர்வான ஒரே வழி தன் னநுபவம் (Direct Experience)தான். தர்க்கம் ஒரு கருவி. ஆனால் அது கைப்பிடி இல்லாத கத்தி. அதாவது அதை எவன் உபயோகிக் கிறானோ அவனையும் அது வெட்டிக் கொண்டே யிருக்கும். எனவே, அறிவின் (Reason) மூலம் அறுதியிட முடியாத ஒன்றை அறிய முயல்வது வீண். அறிவு உலகின்பாற்பட் டது. அது ஆன்மீக ஒளி ஏற்ற முடியாது'' என்பார் அரவிந்தர்.





சேச வாரும் ஜெகத்தீசே!

பல்லாவரத்தை அடுத்துள்ள திரிசூலம் என்ற திவ்விய க்ஷேத்திரம். சுற்றிச் சூழ்ந்த நான்கு குன்றுகளின் உட்புறத்தில் நான்மறைகளின் உட்பொருளான சிவபெருமான் குடிகொண்டிருக்கிறார். பண்டைப் புகழ் படைத்த இக்கோயில் குன்றுகளிடை மறைந்து கிடப்பது போலவே, இடைக் காலத்தில் உலகின் கண்களிலிருந்தும் மறைந்திருந்தது. சமீபத்தில் மெய்யன்பர்களின் நன்முயற்சியால் திரிசூலம் மீண்டும் தனது பழம் பெருமையைப் பெறத் தொடங்கியுள்ளது. ஸ்ரீ வி. டி. ஸ்வாமி அவர்களின் தலைமையில் அமைந்த திருப்பணிக் குழுவினர் இந்தப் புராதன ஆலயத்தைப் புதுப்பித்துச் சிறப்பாகக் கும்பாபிஷேகமும் செய்திருக்கிறார்கள். கும்பாபிஷேக நன்னாளிலிருந்து, இங்கு காருண்யமும் லாவண்யமும் முறுகி மூர்த்தியாகி மிளிரும் தேவி திரிபுரசுந்தரிக்குத் தினமும் ஒரு சஹஸ்ரநாமம் வீதம் அர்ச்சனை செய்து, வியாஸபூர்ணிமையன்று இந்த லட்சார்ச்சனை விதிமுறைப்படி சண்டிஹோமத்துடன் பூர்த்தியுற்றது. அன்று பிற்பகலில் திருவோணம் கூடியதை ஒட்டி, இந்த சிவாலயத்தில் சைவ - வைணவ சமரசத்தைச் சாற்றிக் கொண்டு திகழும் வேங்கடேசப் பெருமானுக்கு லட்சார்ச்சனை தொடக்கம் பெற்றது. தினமும் ஒரு சஹஸ்ரநாமம் வீதம் 108 நாட்களுக்கு நடத்தப் பெறும் இந்த அர்ச்சனை சரியாகத் தீபாவளித் திருநாளன்று பூர்த்தியாகிறது. ரமணீயமான சூழலில் மனம் குளிரத் திகழும் திரிசூலநாதரையும் திரிபுரசுந்தரியையும், திருமாலையும் மக்கள் ஏராளமாக வந்து தரிசித்து மகிழ வேண்டும் என்பதே ஆலய நிர்வாகிகளின் ஆசை. ஆஸ்திகப் பெருமக்கள் இந்த ஆசையை நிறைவேற்றித் தந்து தாங்களும் நிறைவு கொள்வார்களாக!

---

பகுத்தறிவு ஆரம்ப காலத்து ஐயத்தைப் போக்குகிறது. ஆனால், முடிவில் அறிவையே சார்ந்தொழுகும் கோட்பாடுகளெல்லாம், ஐயப்பாட்டுடனேயே முடிவடைகின்றன எனக் கண்டவர் அரவிந்தர்.

ஆன்மீக உணர்வு பெற, அவர் நான்கு இன்றியமையாத தேவைகளைக் கூறுகின்றார்: 1. வேத உபநிடதங்களில் நம்பிக்கை; 2. குருவிடம் நம்பிக்கை; 3. ஆன்ம உணர்வு பெற உண்மையான ஊக்கம்; 4. காலம்.

அடிப்படை உண்மையான ஆன்மா பருப்பொருள்களில் (Matter) உயிரில் (Life) மனத்தில் (Mind) மறைந்து கிடக்கிறது. அவை அனைத்தும் தெய்வீக வெளிப்பாடுகளே.

தெய்வீகம் மனிதனில் சில ஏற்றத் தாழ்வுடன் உணரப்படுகின்றது. அது அதன் சிறப்பு. மனிதனுக்குத் தன்னிச்சை உண்டு. மனிதன் முன்னும் பின்னும் காண முடியும். மனிதன் மேம்பட்ட இறைமை வாழ்வை உணர்ந்து அதோடு கலப்பது மட்டுமல்ல, அதில் தன்னை இழப்பது மட்டுமல்ல, தன்னைப் பரம்பொருளின் இயக்க சக்தியில் இசைத்துக் கொண்டு உலகிலும் இணைத்துக் கொள்ள வேண்டியவனாகிறான். அரவிந்தரின் கொள்கைப்படி முக்தி அல்லது மோட்சம் என்பது மெய்யல்லாத தோற்றங்களினின்று ஒடி மேம்பட்ட ஒன்றில் ஒளிந்து கொள்வதல்ல. பிரம்மம் அல்லாத பிறவற்றை மறுத்து ஒதுக்கித் தள்ளுவதல்ல. மோட்சம் என்பது 'அனைத்தையும் அப்படியே கூட்டாக ஏற்று உறுதிப்படுத்திக் கொள்வது' (Integral Positive Affirmation of All) என்கிறார் அரவிந்தர். எல்லாவற்றையும் தெய்வீகப்படுத்தும் பெரு முயற்சி இது. அது பரம்பொருளின் எந்த நிலையையும் விலக்கிவிடவில்லை.

பரம்பொருளின் வேறுபட்ட தோற்றங்கள் ஒன்றையொன்று முழுமைப்படுத்துவனவே யன்றி, ஒன்றை ஒன்று மறுப்பனவல்ல என்கிறார் அரவிந்தர்.

மனித மனமும் அறிவும் கட்டுப்பட்ட கருவிகள். அவை நமக்கு வழிகாட்ட முடியாது. உண்மைப் பொருளின் தன்மையை அவை நமக்கு உணர்த்த முடியாது. மனிதன், இந்த மனத்துக்கு மேம்பட்ட மகாசக்தியின் தேவ உள்ளத்துக்கு — மனித மனத்துக்கு அதீதமான அதிமானஸ நிலைக்குத் (Super Mind) தன்னை, தான் அறிந்தே அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும். இதுவே சத்திய சாதனை என்பார் அரவிந்தர்.

பரம்பொருளின் இயக்கமும் வெளிப்பாடும் இந்த அதிமானஸ தேவ உள்ளத்தைச் சார்ந்ததே. அது சாதகனிடம் இறங்கி வந்தாலே இவனது நிலையைத் தற்போதுள்ள சிறிய மனத்துக்கு அப்பாற்பட்ட பிரபஞ்ச சக்தியான மகாமனத்தின் நிலைக்கு உயர்த்தித் தெய்வீக சக்தி பெற முடியும். தேவ உள்ளத்தை நம்பால் இறங்கச் செய்வது எளிதல்ல. அதற்கு ஆழ்ந்த ஆன்மீக சாதனை (Sadhana) தேவை.

மேற்சொன்ன தேவ உள்ளக் கொள்கை அரவிந்தரின் மையக் கோட்பாடு. தனி மனிதனின் விடுதலையல்ல, அரவிந்தரின் நோக்கம். மானுடர் அனைவரையும் தேவ சக்தி பெற்றவர்களாக்கி இவ்வுலகையே தெய்வீகமாக்கும் முழுமையான மாற்றத்தைக் குறியாகக் கொண்டது அவரது சித்தாந்தம்.

அரவிந்த யோகம் நம்முடைய பிடிவாதமான இச்சைகளைத் தேவ உள்ளத்துக்கு அர்ப்பணிக்க விடுக்கும் அழைப்பு. அந்த யோக சாதனை எண்ணத்தை, உணர்வை, மனித இச்சையை மேம்படுத்தி, சிதைவுகளை ஒரு பூரணத்தில் இசைவு செய்து இறைமையைத் தழுவ மேல் நிலைக்கு இழுத்துச் செல்கிறது. மேற்கிலும், கிழக்கிலும் உள்ள உயரிய சித்தாந்தங்களின் சமரச லட்சியமாக விளங்குகிறது அரவிந்தர் தத்துவம். அது உலகை விட்டு ஓடவும் சொல்லவில்லை; இப்போது உலகிலுள்ள அவலங்களை ஒப்பவுமில்லை. இந்த அவலங்களை நீக்கும் அருமருந்தைத் தந்து இவ்வுலக வாழ்வையே தெய்வீகப் புனிதமயமாக்குவது அரவிந்த யோகம்.



அடையாளம் தெரியாது! கண்டிப்பாகத் தெரியாது! பேபி மீண்டும் மீண்டும் கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்து அகமகிழ்ந்தாள்.

சப்பை மூக்கு மாயமாய் மறைந்து போய் விட்டது; நசுங்கின கன்னம் போன இடம் தெரியவில்லை!

தன்னுடைய புது மூக்கையும் கன்னத்தையும் தடவி விட்டுக் கொண்டாள். என்றுமே அவளுக்கு அழகிய விழிகள் உண்டு. இப்பொழுது 'எடுப்பான' மூக்கும் சேர்ந்து மூக்கும் முழியுமுடைய பேரழகியாக விளங்கினாள்.

பிளாஸ்டிக் சர்ஜரி செய்து புனர்ஜன்மம் அளித்த பராங்குசத்தை அவள் வாழ்த்தினாள், வாழ்த்தினாள், அப்படி வாழ்த்தினாள்.

'ஹேர் ஸ்டைலை'யும் மாற்றிவிட வேண்டும். கொண்டையும் பின்னலும் வேண்டாம். வயலெட்-ரிப்பன் வைத்துத் தழையத் தழையப் பின்னி விட்டுக் கொண்டால் பிரமாதமாக இருக்கும். பழைய காலத்துச் சாந்துப் பொட்டு அவள் முகத்துக்கு ஒரு தனிக் களை தந்தே தீரும். பேபிக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

மற்றப்படி அவளுக்குச் சாமுத்திரிகா லட்சணங்கள் அத்தனையு மிருந்தன. அந்த விஷயத்தில் அவள் பாக்கியசாலி. எத்தனை பெண்கள் இயற்கை தங்களை வஞ்சித்திருந்ததை உணர்ந்து பிளாஸ்டிக் சர்ஜனை அணுகி, இல்லாத தெளிவு குழைவுகளை உடம்பில் உண்டாக்கித் தரும்படி காலில் விழாத குறையாகக் கெஞ்சுகிறார்கள்?

சப்பை மூக்கு! நசுங்கின கன்னம்! அந்த இரண்டும்தானே அவள் வாழ்க்கையில் முன்னேற முடியாதபடி தடுத்திருந்தன? பெண் பார்க்க வந்தவர்களை யெல்லாம் ஓட ஓட விரட்டின? அது மட்டுமா? படித்துப் பட்டம் பெற்றவளை வெறுப்படையச் செய்து வீட்டை விட்டு விரட்டின? வேலைக்குச் சென்ற இடத்திலெல்லாம் பேட்டியின்போது அந்தப் பாழாய்ப் போன மூக்குத்தானே குறுக்கிட்டு உத்தியோகம் கிடைக்காமல் தடுத்தது? மூளை யாருக்குத் தேவை? முக லட்சணத்தைக் கொண்டல்லவோ ஆளை எடை போடுகிறார்கள்? கடைசியில் ஒரு வேலையும் கிடைக்காமல் போய்... சே! நினைக்கவே வெட்கமாக இருக்கிறது!

பேபி என்ற இந்தப் பெயருக்குத் தலை முழுகிவிட வேண்டும். ரோஸி என்ற புதுப் பெயரில்தான் உலகுடன் தொடர்புகொள்ள வேண்டும். பேபி என்ற 'சப்பை மூக்கி' செத்துவிட்டாள்! ரோஸிக்கும் அவளுக்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது. புது ஊரில் புத்தம் புதிதாக வாழ்க்கையைத் தொடங்க வேண்டும்.

பாண்டுவை (பாண்டுரங்கனை)ப் பற்றித்தான் அவளுக்குப் பயமாக இருந்தது. அந்தப் பயல் மட்டும் தன்னை அடையாளம் கண்டுகொண்டு விடக் கூடாது. கொஞ்ச நாட்கள் அவனுடன் தான் 'அப்படி ஒரு வாழ்வு வாழ்ந்தோம்' என்று எண்ணவே அச்சமாக இருந்தது அவளுக்கு. புது பிளேடைப் பிடித்த நீள் விரல்களின் நகங்கள் இன்று 'க்யூடக்ஸ்' தடவப்பட்டுப் பளபளவென்று மின்னுகின்றன. இனிமேல் இந்த விரல்கள் பிறர் ஜேபிக்குள் புகுந்து லீலைகள் புரிய மாட்டா.

பட்டதாரியான தான் எப்படிப் படுகுழியில் விழுந்து பாண்டுப் பயலுடன் 'பிக்பாக்கெட்'டாக வாழ்ந்தோம் என்று எண்ண எண்ண அவளுக்குத் தலையைச் சுற்றியது. எல்லாவற்றுக்கும் அந்தச் சப்பை மூக்கும், நசுங்கின கன்னமும்தான் காரணம். வீட்டிலே பெற்றோர்கள் சதா திட்டித் தீர்த்தார்கள். இவளுக்குக் கல்யாணமானால்தானே மற்றவர்களுக்கு வழி பிறக்கும்? ஊரில் வேறு அவளை வரும் அவளையும் அவளது மூக்கையும் கேலி செய்தார்கள். பெண் பார்க்க வந்தவர்கள் சொல்லிக் கொள்ளாமல் ஓடினார்கள். உத்தியோகத்துக்குச் சென்றால் முகத்தைச் சுளித்தார்கள். சமூகத்தின் மீதும் மனித வர்க்கத்தின் மீதும் அவளுக்கு வெறுப்பு வளர்ந்தது. அவற்றின் மீது பழி தீர்த்துக் கொள்வதாக எண்ணிக் கொண்டுதான் அவள் 'பிக்பாக்கெட்' தொழிலில் இறங்கினாள்.

பாண்டுவின் தொழில் திருடுவதே தவிர, மற்றபடி அவன் தங்கக் கட்டி. எத்தனையோ தடவை அவள் மாட்டிக் கொண்டபோது, குற்றத்தைத் தான் ஏற்றுக் கொண்டு நிரம்ப விடம் அடி வாங்கி யிருக்கிறான். அது மட்டுமில்லை. சம்பாதித்த பணத்தை யெல்லாம் இரக்க உணர்ச்சி மேலிட்டு ஏழைகளுக்குத் தருவதுமுண்டு. எல்லாவற்றுக்கும் மேலாக அவன் நடந்து கொண்ட கண்ணியமான முறை அவளுக்கு அவனிடம் மதிப்பை வளர்த்திருந்தது. அறைக்குள்ளே அவளைப் படுக்கச் சொல்லி, குளிர் காலத்தில் கூட, வெளியே தூங்குவான் அவன்.

# புது அவதாரம்!

என்ன இருந்தாலும் அவன் திருடன். மீண்டும் அவனிடம் போய்ச் சிக்கிக் கொள்ளக் கூடாது. தென்னாட்டில் இருந்தால் என்றாவது ஒரு நாள் அவன் கண்ணில் பட்டேயாக வேண்டும். டில்லி, பம்பாய் போன்ற நகரங்

களில் தன் படிப்புக்கேற்ற உத்தியோகமா கிடைக்காது? கொஞ்ச நாட்கள் பொறுத்து மனத்துக்குப் பிடித்த ஒருவனை மணக்க வேண்டும். அவன் மகா அழகனாக இருக்க வேண்டும்!

டில்லியில் குடியேறி மூன்று வருடங்கள் ஓடிவிட்டன. கைநிறையச் சம்பளம். அநேகம் நண்பர்கள். வாழ்க்கை சுவைத்தது. எத்தனையோ இளைஞர்கள் அவளைக் காதலிக்க முன்வந்தார்கள். ஓரிருவர் கல்யாணம் செய்து கொள்ளவும் தயாராக இருந்தார்கள். ஆனால் ரோஸி ஒவ்வொரு தடவையும் சிரித்து மழுப்பினாள். முன்னொரு காலத்தில் அவளை 'வேண்டாம்' என்று தட்டிக் கழித்த பின்னையாண்டான் ஒருவனையும் அவள் பஸ்ஸில்



சந்தித்தாள். அவனுக்கு எங்கே அவளை அடையாளம் தெரிந்திருக்கப் போகிறது? மரப்பாச்சியாட்டம் இருந்த மனைவியுடன் பிரயாணம் செய்து கொண்டிருந்தவன் அவளை விழுங்குவதைப் போலல்லவா பார்த்தான்? வேண்டும்! வேண்டும்! நன்றாக வேண்டும்! தன்னை நிராகரித்ததற்கு இந்த மரப்பாச்சியுடன் மாரடிப்பதுதான் சரியான தண்டனை!

வாழ்க்கை வான வில்லாகத்தான் எப்போதும் காட்சி யளித்தது. ஆனால் ஒரோரு சமயம் பத்திரிகைகளில் 'பிக்பாக்கெட்டு'கள் பிடிபட்டதாகப் படிக்கையில் மனம் ஏனோ அல்லல் படும். பாண்டுவின் உருவம் மனக் கண் முன்னால் தோன்றும். ஆனால் அவளை எண்ணி இனிமேல் எதற்காகப் பயப்பட வேண்டும்? உருவம்தான் அடியோடு மாறி விட்டதே!

எதை நினைத்து நாம் அதிகமாக அஞ்சுகிறோமோ, அது நடந்து விடுகிறது. ஒரு நாள் டில்லி பஸ் ஒன்றில் பாண்டு ஏறுவதை அவள் கண்டுவிட்டாள். 'விண்டர்' குளிருக்காக அவன் கோட்டு அணிந்திருந்தான். தலையைச் சுற்றி அடக்கமாக 'மப்ளர்' வேறு. புகைக் கண்ணாடி. அவன் பக்கத்தில் அவள் தான் வீற்றிருந்தாள். ஓரிரு முறை விழுங்குவது போல் அவளையே பார்த்தான். அவளும் வேண்டுமென்றே 'ஹிந்து' பத்திரிகையை மூடி விட்டு ஹிந்திப் பத்திரிகையைப் படிக்கத் தொடங்கினாள். வீடு திரும்பினவள் மனம் ஒரு நிலையில் இல்லை. ஆபத்து தன்னை நெருங்குவதாகத் தோன்றியது அவளுக்கு!

**இனி தம் மனைவி விஜயா எழுதிய அரைகுறைக் கதையை முடித்து வைக்கிறார் திரு ஜி. எஸ். பாலகிருஷ்ணன்.**

மறுநாள் பாண்டுவிடமிருந்து அவளுக்குக் கடிதம் எதுவும் வரவில்லை. ''நீ என்னதான் மூக்கை மாற்றிக் கொண்டாலும், பஸ்ஸில் ஏறினது முதல் இறங்குவது வரையில் விரலைச் சொடுக்கும் கெட்ட வழக்கத்தை விடவில்லையே.... அதிலிருந்து உன்னை நான் அடையாளம் கண்டுகொண்டுவிட்டேன்'' என்று அவன் எழுதவில்லை. ''கையில் தோளருகே நீ குத்திக் கொண்டிருந்த பச்சை, நீ 'ரவிக்' அணிந்திருந்ததால் வெளித் தெரிந்து உன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டது'' என்று அவன் குறிப்பிட்டிருக்கவில்லை..... இது என்ன கதையா, அப்படியெல்லாம் நடக்க ?

வீட்டுக்கு வந்தவள் தன் கைப் பையிலிருந்து பர்ஸ் அபேஸ் செய்யப்பட்டிருந்ததை அறிந்து திடுக்கிட்டாள். தோளிலிருந்து தொங்கும் டம்பப் பையை வெகு லாகவமாகத் திறந்து அதனுள்ளிருந்து பர்ஸைச் சாமர்த்தியமாக எடுத்துக்கொண்டு மீண்டும் டம்பப் பையை அவளறியாமல் மூடுவது என்றால் அது பாண்டுவினால்தான் முடியும். அதுமட்டுமில்லை, அவன் அவளை அடையாளம் கண்டு கொள்ளவில்லை என்பதும் ஊர்ஜிதமாயிற்று. அவள் இன்னாரென்று தெரிந்திருந்தால் பாண்டுப் பயல் ஒரு நாளும் அவள் பர்ஸை அபகரித்திருக்கமாட்டானல்லவா?

போன பர்ஸைப் பற்றி அவள் துளிக்கூட வருந்தவில்லை. புது அவதாரத்தில் நிம்மதியுடன் வாழலாம் என்று எண்ணியபோது அவள் மனத்தில் புதுத் தெம்பு பிறந்தது !



## இங்கிலாந்து கோஷ்டிக்கு இளம் காப்டன்

1972 நவம்பர், டிசம்பர் 1973 ஜனவரி மாதங்களில் இங்கிலாந்திலிருந்து எம். ஸி. ஸி. கிரிக்கெட் குழுவினர் இந்தியாவுக்கும், பாகிஸ்தானுக்கும், இலங்கைக்கும் ஆட வருகிறார்கள். இந்த இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டிக்குக் காப்டனாக நியமிக்கப் பட்டிருப்பவர் டோனி லூயிஸ். லூயிஸ் பார்க்க அழகாயிருப்பதோடு அழகான பாட்ஸ்மனும்கூட. பதினேழு வயதிலேயே அவர் முதல்தர கிரிக்கெட் ஆட்டங்களில் கலந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றார். 1969ம் வருஷத்தில் கிளாமர்கன் குழுவுக்குக் காப்டனாகக் கௌண்டி சாம்பியன்ஷிப்பில் கலந்து கொண்டிருக்கிறார். இவர் ஓர் எழுத்தாளர். ரக்பி ஆட்டத்தைப் பற்றி ரேடியோ விமர்சனமும் கட்டுரைகளும் எழுதிப் புகழ்பெற்றவர். ஒரு காப்டனாக இருப்பவர் அரசியல் தூதுவராகவும் (Diplomat) சமாதானப்பிரியராகவும் நட்பை வளர்ப்பவராகவும் மைதான நடவடிக்கைகளை லாகவமாகக் கையாளுபவராகவும் இருக்க வேண்டும். இளைஞரான டோனி லூயிஸ் இந்தச் சிரமமான காரியங்களைச் சமாளிப்பார் என்ற எண்ணத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

இங்கிலாந்து காப்டனைத் தேர்ந்தெடுக்கப் பலமான பரீட்சை நடத்தினர். பாய்காட் பெயரும் அடிபட்டதாம்! ஆனால் அடிலேய்டில் அவரை 'ரன் அவுட்' செய்ததற்காக மட்டையைக் கோபத்தில் வீசியெறிந்து. அம்பயரிடம் மன்னிப்புக் கோராமல் போன நிகழ்ச்சி காரணமாம் அவரையே 'பாய்காட்' பண்ணும்படியாகி விட்டது! இளம் காப்டன் டோனி லூயிஸ் இளம் கோஷ்டியோடு ஆட வருகிறார். என்ன நேருமோ, பார்க்கலாம்.

ஆதாரம்: 'ஸ்டேட்ஸ்மன்'

## சரித்திரம் கண்டிராத சாதனை !

நீச்சல் மன்னர் மார்க் ஸ்பிட்ஸ் ஏழு தங்கப் பதக்கங்களைப் பெற்று ஏழு உலக ரிகார்டுகளைக் கண்டிருக்கிறார். அமெரிக்காவில் கலிபோர்னியா மாநிலம் மார்க் ஸ்பிட்ஸ் பிறந்த மண். இருபத்திரண்டு வயதுள்ள பட்டதாரி மார்க் ஸ்பிட்ஸ்-க்குப் பல் டாக்டராக ஆசை. இரண்டாம் வயதிலேயே நீரிலே விளையாடத் தொடங்கிய விளையும் பயிர்.- மார்க் ஸ்பிட்ஸ் ஜார்ஜ் ஹைன்ஸிடம் நீச்சல் பயிற்சி பெற்றார். இவரது நீச்சல் பயிற்சிக்காகத் தமது வாசஸ்தலத்தையே மாற்றிக் கொண்டார் இவரது தந்தை. விளைவு: இவர் வேலை செய்யும் இடத்துக்கும் வீட்டுக்கும் இடையே உள்ள தூரம் நூறு மைல்! தந்தை பட்ட சிரமம் வீண் போகவில்லை. ஏழு தங்கப் பதக்கங்களுடன் நீச்சல் வீரர் மார்க் ஸ்பிட்ஸ் நாடு திரும்புகிறார். மார்க் ஸ்பிட்ஸின் சாதனை சரித்திரம் கண்டிராத ஒன்று. - குண்டுமணி



# மைக்ரோஃபைன்ட்
# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது—

**சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.**









சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோஃபைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • ஃப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

நிகோலஸ் (N) தயாரிப்பு

AG 57 TM

# சத்திய வெள்ளம்

## நா. பார்த்தசாரதி

### பதினொன்றாவது அத்தியாயம்

இராவணசாமியோடு ஃபோனில் பேசும்போது தம்முடைய அறிவுக்கும் பதவிக்கும் ஏற்ற கம்பீரமான கட்டளைக் குரலில் அதை அழுத்தமாகப் பேசாமல் ஏன் கெஞ்சுவது போலவும், கொஞ்சுவது போலவும் துணைவேந்தர் அப்படிக் குழைகிறார் என்பது அருகிலிருந்த பூதலிங்கத்துக்கு வியப்பாயிருந்தது. இராவணசாமியிடம் பேசி ஃபோனை வைத்ததும் தாமே தேர்தல் முடிவுகளை அறிந்து கொள்ளும் ஆவலுடன், ''வாட் எபௌட் எலக்ஷன் ரிஸல்ட்ஸ்?'' என்று பூதலிங்கத்தை விசாரித்தார் தாயுமானவனார். பூதலிங்கம் இதற்கு உடனே மறுமொழி கூறிவிடவில்லை. சில விநாடிகள் தயங்கினார். அப்புறம் சொன்னார் :

''முடிவைப் பற்றி இப்போது என்ன வந்தது? அதைத்தான் கொஞ்சம் தாமதமாக அறிவிக்கலாம் என்று நீங்களே சொன்னீர்களே....?''

''சொன்னேன்.... இப்போது முடிவுகளைப் பற்றியும்தான் கவலைப்பட வேண்டியிருக்கிறது. வென்றவர்களின் வெற்றிக் களிப்போ, தோற்றவர்களின் தோல்வி ஏமாற்றமோ எம். எல். ஏ. யின் லாரிகளுக்கு ஆபத்தாக முடிந்துவிடக் கூடாதே என்று வேறு பயமாயிருக்கிறது.''

இதைக் கேட்டுப் பேராசிரியர் பூதலிங்கம் உள்ளூறச் சிரித்துக் கொண்டார். பல்கலைக் கழகத்தின் பல்லாயிரக்கணக்கான மாணவர்களை நினைத்து அவர்களுடைய அமைதிக்கும், நலனுக்கும் கவலைப்பட்டுப் பயப்படாமல் துணைவேந்தர் யாரோ ஒரு தனி மனிதருக்கும் அவருடைய உடைமைக்குமாகப் பயப்படுவது அருவருக்கத்தக்கதாக இருந்தது. நன்றாகவும் ஆழமாகவும் கற்ற கல்வியினால் பயங்கள் விலகி நியாய உணர்வும் தார்மீகக் கோபமும் பெருக வேண்டும். ஆனால் இன்று பல கல்விமான்கள்தான் அளவுக்கு மீறி அஞ்சுகிறவர்களாகவும், நியாய உணர்வு அற்றவர்களாகவும், தார்மீகக் கோபம் சிறிது கூட இல்லாதவர்களாகவும் போய்விட்டார்கள் என்பதை நினைத்தபோது பூதலிங்கம் நெட்டுயிர்த்தார். தம்மைப் போல் ஒன்றிரண்டு பேர் விதிவிலக்காக இருப்பதுகூட மற்றவர்களுக்கு ஒரு விநோதமாகவே தோன்றும் என்பது அவருக்கே புரிந்துதான் இருந்தது. மாணவர் பக்கம் நியாயம் இருப்பதை மறுபடியும் தயக்கமின்றித் துணைவேந்தரிடம் கூறினார் அவர்: ''இதில் எம். எல். ஏ. யை நினைத்து நாம் பயப்பட ஒன்றுமில்லை சார்! கலகம் செய்து பல்கலைக் கழகத்தில் அமைதி குலையும்படி செய்து தேர்தலை நடக்கவிடாமல் பண்ண வேண்டும் என்றோ என்னவோ, லாரிகளையும், அடியாட்களையும் ஆயுதங்களையும் அவரே இங்கு அனுப்பியிருப்பார் போலிருக்கிறது. அவருடைய போதாத காலம் பையன்கள் லாரிகளைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டார்கள். லாரிகள் திரும்பக் கிடைக்க வேண்டுமானால் அவர் கொஞ்சம் பணிந்து போக வேண்டியதாகத்தான் இருக்கும். வேறு வழியே இல்லை.......''

''நோ... நோ... அப்படி ஒரேயடியாகச் சொல்லிவிடாதீர்கள். நீங்கள் எப்போதுமே ஸ்டுடண்ட்ஸ் பக்கத்தில்தான் பேசுவீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் இந்தக் காலத்துப் பையன்களும் ரொம்ப 'எமோஷனலாக' இருக்கிறார்கள். எதற்கும் உடனே 'எக்ஸைட்' ஆகிவிடுகிறார்கள்.....''

'' இந்தத் தலைமுறையில் நீங்கள் அதைத் தவிர்க்க முடியாது, சார்! சுற்றிலும் ஒழுங்கீனம், ஊழல், லஞ்சம், பணம், பதவி ஆசை மிகுந்த முதியவர்களைக் கொண்ட ஒரு சமூகத்தில் இளந் தலைமுறை கிளர்ச்சி மனப்பான்மையும் எழுச்சியும் கொண்



டதாகத்தான் இருக்கும்; இருக்க வேண்டும்.''

இதற்குப் பதில் எதுவும் சொல்ல முடியாமல் கொஞ்சம் கோபத்துடனேயே பூதலிங்கத்தை வெட்டிவிடுவதுபோல் முறைத்துப் பார்த்தார் துணைவேந்தர். வாக்குவாதத்திலும், கோபத்திலும் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவர்கள் பற்றி மீண்டும் கேட்க மறந்துவிட்டார் அவர். அதற்குள் இராவணசாமியே அங்கு வந்து சேர்ந்துவிடவே துணைவேந்தரும், பூதலிங்கமும் தங்கள் வாக்குவாதத்தைத் தொடர முடியவில்லை. இராவணசாமியோடு கோட்டம் குருசாமியும் வந்திருந்தார். துணைவேந்தர் இருக்கையிலிருந்து எழுந்து நின்று அவர்களை வரவேற்றார்.

அவர் அப்படிச் செய்தது பூதலிங்கத்துக்கு மிகவும் வேதனையாயிருந்தது. லாரியை ஓட்டிக் கொண்டு போக வந்த டிரைவர்கள் என்ற பேரில் குண்டோதரர்கள் போல் மூன்று தடித்த ஆட்களும் துணைவேந்தர் அலுவலக முகப்பில் வந்து நின்று கொண்டிருந்தார்கள். துணைவேந்தரின் மேஜைக்குமுன் எதிரே போடப்பட்டிருந்த பார்வையாளர்களுக்கான நாற்காலிகளில் ஒன்றில் பூதலிங்கம் அமர்ந்திருக்கவே இராவணசாமி, குருசாமி இருவரும் பக்கத்துக்கு ஒருவராகப் பேராசிரியரின் இருபுறமும் அமர்ந்து கொண்டார்கள். உள்ளே நுழையும்போதே துணைவேந்தருக்குப் பெரிய கும்பிடாகப் போட்டுவிட்ட அவர்கள் நாற்காலிக்ளில் உட்கார்ந்த பின்பு அப்போதுதான் பூதலிங்கம் அங்கிருப்பதையே கவனித்தவர்கள்போல், வேண்டாவெறுப்பாக, ''வணக்கங்க'' என்றார்கள். நேர்மையும், துணிவும், ஒழுக்கமும் உள்ளவர்கள் எதிர்ப்பட்டால் அவை அறவே இல்லாதவர்களுக்கு ஏற்படும் ஒருவிதத் தாழ்வு மனப்பான்மை உள்ளே வந்த இருவரிடமும் இருந்தது. பூதலிங்கத்துக்கு இருபுறமும் துணிந்து அமர்ந்துவிட்டாலும் அவர்கள் கூச்சத்தோடுதான் இருந்தார்கள். பூதலிங்கம் தலைநிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். அவருடைய பார்வை நேர் எதிரே இருந்த துணைவேந்தரின் முகத்தில் இலயித்திருந்தது.

'' என்னைத் தப்பாகப் புரிஞ்சுக்காதீங்க, மிஸ்டர் ராவணசாமி! இந்தக் காலத்துப் பையன்களே ரொம்ப உணர்ச்சி வசப்படறாங்க. 'சுருக்'குனு கோபமும் வருது..... ஏதோ இதமாக ரெண்டு வார்த்தை சொல்லி லாரிகளைத் திருப்பிக் கொண்டு போவதுதான் உங்களுக்கு நல்லது.....'' என்று பேச்சைத் தொடங்கினார் துணைவேந்தர். ராவணசாமியோ, கோட்டம் குருசாமியோ இதற்குப் பதிலே சொல்லாமல் இருந்தார்கள். துணைவேந்தரின் பேச்சிலிருந்த குழைவான தொனி பூதலிங்கத்துக்குப் பிடிக்கவில்லை.

'நீங்கள் உங்களுடைய லாரிகளின் மூலம் மாணவர்களைத் தாக்க முயன்றது தவறு! அதனால்தான் இவ்வளவும் ஆயிற்று' என்பதுபோல் எதிரே இருப்பவர்களை எச்சரிக்கும் துணிவு சிறிதுகூட இல்லாமல் ஏதோ தாமோ, தம் மாணவர்களோ செய்துவிட்ட குற்றத்துக்காக இரங்குவதுபோன்ற தொனியில் துணைவேந்தர் பேசியது பூதலிங்கத்துக்கு ஆச்சரியமாக இருந்தது.

''நாங்கள் வேற்றான் வீட்டு விவேகத்தையும் மதிப்பவர்கள். தோற்றோர் பக்கத்துத் துணிவையும் வியப்பவர்கள். எங்களை நீங்கள் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாதுங்க...'' என்று திடீரென்று சம்பந்தமோ, அர்த்தமோ இன்றிப் பூதலிங்கத்தின் பக்கம் திரும்பிக் குழைவாக ஆரம்பித்தார் இராவணசாமி. இந்த வஞ்சப் புகழ்ச்சியின் பொருளென்ன என்பது முதலில் பூதலிங்கத்துக்குப் புரியவில்லை. போகப் போகப் புரிந்தது. தாம் மைதானத்துக்கு வந்து மாணவர்களிடம் மன்னிப்புக் கேட்காமல் பூதலிங்கத்தையும் அவரோடு டிரைவர்களையும் அனுப்பியே லாரிகளைத் திருப்பிக் கொண்டு போக விரும்பினார் இராவணசாமி.

''பாவம்! ரொம்பச் சிரமப்படுகிறார். 'ஹெல்ப்' பண்ணுங்களேன் மிஸ்டர் பூதலிங்கம்!'' என்று தாயுமானவனாரும் அதற்கு ஒத்துப் பாடினார். பூதலிங்கத்துக்குக் கோபம் வந்து விட்டது. அவர் தமக்கு இருபுறமும் அமர்ந்திருந்தவர்களிடம் எதுவும்



பேசாமல், துணைவேந்தரைப் பார்த்து மட்டுமே பதில் சொன்னார்:

''நீங்கள் கூப்பிட்டனுப்பியதற்காகத்தான் நான் வந்தேன் சார்! இதில் 'ஹெல்ப்' என்ற பேச்சுக்கே இடமில்லை. மாணவர்கள் சொல்லியதை உங்களிடம் வந்து சொல்லிவிட்டேன். நீங்கள் ஏதாவது சொன்னால் அதை மாணவர்களிடம் போய்ச் சொல்லுகிறேன். அவ்வளவுதான் நான் செய்யலாம். ஆனால் மாணவர்களிடம் அவர்கள் கோரிக்கையை விட்டுக் கொடுக்கச் சொல்லிச் சிபாரிசு செய்ய மட்டும் நான் ஆளில்லை.''

''கொஞ்சம் தயவு பண்ணுங்க சார்'' என்று மறுபடியும் இராவணசாமியே பேசத் தொடங்கியதும், ''இதோ பாருங்கள், மிஸ்டர் இராவணசாமி! தயவுசெய்து நீங்கள் எதைச் சொல்ல வேண்டுமானாலும் வி.சி.யிடம் சொல்லுங்கள். வி.சி.யின் கீழேதான் நாங்கள் எல்லாரும் வேலை பார்க்கிறோம். எங்களிடம் ஏதாவது சொல்ல வேண்டுமானால் அவர் சொல்வதுதான் முறையாக இருக்கும்'' என்று முகத்தில் அடித்தாற்போல் பதில் சொன்னார் பூதலிங்கம். இதைக் கேட்டு இராவணசாமிக்கு மூஞ்சியில் உணர்வு செத்துப் போயிற்று. பூதலிங்கத்தையும் கண்டிக்க முடியாமல், இராவணசாமியையும் கடிந்து கொள்ளத் துப்பில்லாமல் துணைவேந்தர் திணறினார். பூதலிங்கம் சிறிதும் விட்டுக் கொடுக்கவில்லை. இராவணசாமியும், குருசாமியுமோ பலித்த மட்டும் இலாபம் என்பதுபோல் பேரம் பேசினார்கள்.

நீண்ட நேரச் சர்ச்சைக்குப் பின்னால் துணைவேந்தர், பூதலிங்கம், இருவரும் இராவணசாமியையும், குருசாமியையும் உடன் அழைத்துக்கொண்டு பல்கலைக் கழக விடுதி மைதானத்துக்குச் சென்றார்கள். இராவணசாமி மாணவர்களிடம் வருத்தப்பட்டு மன்னிப்புக் கேட்க இசைந்திருந்தார். சிலர் மானத்தைக் காத்துக் கொள்வதற்காகப் பொருளை இழப்பார்கள். வேறு சிலர் பொருளைக் காத்துக் கொள்வதற்காக மானத்தையே இழந்துவிடவும் தயாராயிருப்பார்கள். இராவணசாமி எப்போதுமே இரண்டாவது வகை. அவரிடம் முரட்டுப் பிடிவாதம் உண்டு. ஆனால் மானம் கிடையாது. பிடிவாதமும் மானமும் ஒன்றில்லை. மானம் விட்டுக் கொடுக்க முடியாதது. ஆனால் பிடிவாதம் அதைவிடப் பெரிய பிடிவாதத்தின்முன் விட்டுக் கொடுக்கப்படுவது. இராவணசாமியின் பிடிவாதமும் அப்படித்தான் ஆயிற்று.

விடுதி மைதானம் வரை கூட வந்த துணைவேந்தர், இராவணசாமி மாணவர்களிடம் மன்னிப்புக் கேட்கும் காட்சியைக் காணத் தாம் அருகே இருக்க வேண்டாம் என்று நினைத்தோ என்னவோ அங்கே பக்கத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்த ஒரு புது 'பிளாக்' கட்டட வேலையை மேற்பார்க்கப் போவதுபோல் நடுவே மெல்ல நழுவி விட்டார்.

பேராசிரியர் பூதலிங்கத்தின்மேல் இருந்த மதிப்பின் காரணமாக மாணவர்கள் இராவணசாமியையும் அவரோடு வந்தவர்களையும் பொறுத்துக் கொண்டனர். அப்படி யிருந்தும்கூட எம். எல். ஏ.வை அவமானப்படுத்தும் குரல்களும், டௌன், டௌன் ஒலிகளும், 'ரௌடியிசம் ஒழிக', 'குண்டாயிசத்துக்கு முடிவுகட்டுவோம்' என்ற வாசகங்களும் எழுவதைக் கட்டுப்படுத்த முடியவில்லை. இராவணசாமி ஓரளவு பயந்தே போனார். ஆனால் பேராசிரியர் கைகளை உயர்த்தி அமைதியாயிருக்குமாறு கோரியதும் கூப்பாடுகள் நின்றன. அமைதி நிலவியது. பாண்டியனையும், மோகன்தாஸையும் கூப்பிட்டு நிறுத்தி இராவணசாமியை மன்னிப்புக் கேட்கச் சொன்னதும் அவர் மன்னிப்புக் கேட்டு விட்டார். உடனே அவரையும் வைத்துக் கொண்டே பாண்டியன் உரத்த குரலில் கூடியிருந்த மாணவர்களுக்கு அவர் மன்னிப்புக் கேட்டுவிட்ட விவரத்தை அறிவித்தான். மாணவர்கள் லாரிகளை விட்டு விலகிக் கொண்டதும் இராவணசாமியின் டிரைவர்கள் லாரிகளை எடுத்துக் கொண்டு போனார்கள். வழி மறித்து அமர்ந்திருந்த மாணவிகள் எழுந்து வழிவிட்டுப் பாண்டியன் முதலியவர்கள் நின்றிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்தனர்.

லாரிகள் வெளியேறிய சிறிது நேரத்துக்கெல்லாம் காரில் புறப்பட்ட இராவணசாமியும், குருசாமியும், போகும்போது ஒரு வாய்வார்த்தை மரியாதைக்காகக்கூட பூதலிங்கத்திடம் சொல்லிக் கொண்டு போகவில்லை. அவர்கள் அப்படி நடந்து கொண்டதிலிருந்து அவர்களுடைய மனத்துக்குள் எவ்வளவு ஆத்திரம் முற்றிக் கனன்று கொண்டிருக்கும் என்பதைப் பூதலிங்கமும் மாணவர்களும் புரிந்து கொள்ள முடிந்தது. தீவிரவாதிகளான மாணவர்கள் சிலருக்கு இராவணசாமியின் மன்னிப்பை ஏற்றுக் கொண்டு லாரிகளைத் திருப்பி அனுப்பியதே பிடிக்கவில்லை. 'வீ ஷுட் நாட் காம்ப்ரமைஸ் லைக் திஸ் வித் ரௌடி எலிமெண்ட்ஸ்' என்று பாண்டியனிடம் வந்து இரைந்தான் ஒரு மாணவ நண்பன்.

'' என்ன சார்? 'போலிங்' ரெண்டு மணிக்கே முடிந்தும் இன்னும் ரிஸல்ட் என்னன்னே சொல்லலியே நீங்க ?'' என்று பேராசிரியர் பூதலிங்கத்திடம் கேட்டாள் கண்ணுக்கினியாள். அவள் கையில் பெரிய சாக்லேட் டின் ஒன்று தயாராயிருந்தது. அவளோடு கூட இன்னும் சில மாணவிகளும் உடன் நின்றுகொண்டிருந்தனர்.

'' எல்லாரும் இப்படியே லைப்ரரி பில்டிங் முகப்புக்கு வாருங்கள்! இன்னும் பத்து நிமிஷத்துக்குள் தேர்தல் முடிவுகளைத் தெரிவித்துவிடுகிறோம்'' என்று சொல்லி விட்டு மாணவர்கள் குழாத்திலிருந்து வழி விலக்கிக் கொண்டு நூல் நிலையத்துக்கு விரைந்தார் பூதலிங்கம்.

அடுத்த சில கணங்களில் நூல் நிலைய முகப்பில் மாணவ மாணவிகளின் கூட்டம் சேர்ந்துவிட்டது. சிலர் கையில் மாலைகள், சிலர் கையில் புதிய கதர், கைத்தறித் துண்டுகள், மலர்க் கொத்துக்கள் என்று வெற்றியை வரவேற்கும் மகிழ்ச்சியைக் கொண்டாடி அளிப்பதற்கான பொருள்கள் தென்பட்டன. என்ன காரணத்தாலோ தாம் பக்கத்தில் வந்து சும்மா நின்று கொண்டு உதவிப் பேராசிரியரிடம் கொடுத்து முடிவுகளைப் படிக்கச் செய்தார் பூதலிங்கம்.

மாணவர் பேரவைத் தலைவனாக மோகன்தாஸும், செயலாளனாகப் பாண்டியனும், துணைத் தலைவர், துணைச் செயலாளர்களாக இவர்களுக்கு வேண்டிய தரப்பு மாணவர்களுமே பெரும்பான்மை வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார்கள். அன்பரசன் வகை மாணவர்களில் ஒருவர் கூட வெற்றி பெறவில்லை. அவர்கள் பெற்றிருந்த வாக்குகளும் மிக அற்பமாகவே இருந்தன. எதிர்பார்த்தது தான் என்றாலும், மாணவர்களிடையே மகிழ்ச்சி பெருக்கெடுத்தது. கண்ணுக்கினியாளின் கையிலிருந்த சாக்லேட் டின்னிலிருந்து இரண்டு உள்ளங் கையும் நிறைய சாக்லேட்களை வாங்கி அப்படியே மேலிருந்து சாக்லேட் மழையே பொழிவது போல் உயர்த்தித் தூவினான் பொன்னையா. பாண்டியனை முகம் மறைப்பதுபோல், மாலைகளும், ஆடைகளும் அணிவிக்கப்பட்டன. மோகன்தாஸை அப்படியே தோளில் தூக்கிவிட்டான் ஒரு பலசாலி மாணவன். படிகளில் ஏறி நூல் நிலைய முகப்புக்குப் போய் அங்கே நின்ற பேராசிரியர்களுக்கும், பிறருக்கும் இனிப்பு வழங்கினாள் கண்ணுக்கினியாள்.

'' எனக்கு வேண்டாம், அம்மா! தோற்ற வேட்பாளர்கள் நாளைக்கே உங்களிடம் நான் சாக்லேட் லஞ்சம் வாங்கியதாகக் கதை கட்டி விடுவார்கள்'' என்று சிரித்துக் கொண்டே மறுத்தார் பூதலிங்கம்.

'' பரவாயில்லை! 'சாக்லேட்டாக லஞ்சம் தரவேண்டும் என்று தோற்றவர்களாகிய நீங்கள் தயாராயிருந்தால் நான் உங்களிடம்கூட அதை வாங்கிக் கொள்வேன்' என்று அவர்களிடம் பதில் சொல்லுங்களேன் சார்.''

''இந்தக் காலத்தில் இப்படி வென்றவர் செலவில் சாக்லேட் சாப்பிடுவது கூட லஞ்சத்துக்குச் சம்மானதுதான்'' என்று சிரித்தபடி கூறினார் அறிவிப்புக்களைச் செய்த உதவிப் பேராசிரியர்.

''இந்த நகைச்சுவைக்காகவே உங்களுக்கு இன்னும் இரண்டு சாக்லேட் பரிசு தரலாம் சார்'' என்று கூறி மறுத்தவர் கையிலும் சாக்லேட்டைத் திணித்து விட்டு வந்தாள் கண்ணுக்கினியாள்.

**சத்திய வெள்ளம்**

சுற்றிலும் ஒழுக்கீனம், ஊழல், லஞ்சம், பணம், பதவி ஆசை மிகுந்த சில முதிர்ந்தவர்களைக் கொண்ட ஒரு சமூகத்தில் இளந் தலைமுறை கிளர்ச்சி மனப்பான்மையும், எழுச்சியும் கொண்டதாகத்தான் இருக்கும்.

மாணவிகளில் ஒருத்தி பல்கலைக் கழகப் பூங்காவில் பறித்த பல நிறப் பூக்களாலேயே நூலில் மாலை போல் கட்டிய ஓர் ஆரத்தைக் கொண்டு வந்து கண்ணுக்கினியாளிடம் கொடுத்து, '' இதை உன் கையால் நம்முடைய புதிய பேரவைச் செயலாளருக்குச் சூட்டேன், பார்க்கலாம்....'' என்று கண்களிலும் இதழ்களிலும் குறும்பு மலர வேண்டினாள். கண்ணுக்கினியாளும் அதை மறுக்கவில்லை. அந்த மாலையை வாங்கி அவள் பாண்டியனுக்குச் சூட்டுவதற்குச் சென்ற போது, ''இந்த மாதிரி நீ எனக்கு ஒரு மாலையைச் சூட்ட வருவது போல் நான் சில நாட்களுக்கு முன்பே ஒரு கனவுகூடக் கண்டாயிற்று. நீயோ இவ்வளவு நாட்கள் கழித்து இத்தனை தாமதமாக வந்து அந்தக் காரியத்தைச் செய்கிறாய். தாமதமான அன்பளிப்புக்களுக்கு 'லேட் ஃபீ' தர வேண்டும். தெரியுமா ?'' என்று சொல்லி நகைத்தான் அவன்.



■ பஸ்ஸில் நின்றுகொண்டு, கையில் துணிப் பொட்டலங்களுடன் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டு பிரயாணம் செய்துகொண்டு வந்த ஒரு பெண்ணின் பரிதவிப்பைப் பார்த்து ஒரு சக பிரயாணி அவளுக்கு உதவ விரும்பி, தம் இடத்தை விட்டு எழுந்து அங்கு உட்கார்ந்துகொள்ளுங்கள். என்று புன்னகையோடு கூறினார். உடனே அந்தப் பெண்மணியும் மலர்ந்த முகத்துடன், ''பரவாயில்லை. நீங்கள் உட்காருங்கள். இன்று நீங்கள் உதவி செய்தீர்களானால், நாளையும் யாராவது உதவி செய்ய மாட்டார்களா என்ற எண்ணம் வளர்ந்துவிடும் எனக்கு'' என்று கூறினாள்.

- 'பீர்னஸ்' - பேஜண்ட்



■ நிருபர்: உங்கள் பெயர் என்ன?

ஆட்டக்காரர்: போஸ்டாவிஸ்டிஸ்கி.

நிருபர்: கடவுளே! பெயரை உச்சரிக்கவே வர மாட்டேனென்கிறதே! எப்படி எழுதுவது?

ஆட்டக்காரர்: நல்லதுதான். நான் விளையாட்டில் ஏதாவது தவறு செய்தால் அதைப் பற்றி நீங்கள் காரசாரமாய் விமர்சிப்பதைத் தவிர்க்கத்தான் அப்படிப் பெயரை மாற்றி வைத்துக் கொண்டேன்!

- கே.வி. முரளி

---

''இதோ 'வேட் கீபீ'யும் உண்டு! இந்தாருங்கள்'' என்று அவன் வலது கை நிறைய மிட்டாய்களை அள்ளி வைத்தான் அவன். அவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது 'புது பிளாக்' கட்டடங்களின் வேலையைச் சுற்றிப் பார்ப்பது போல் ஓர் அரை மணி நேரத்தைக் கழித்திருந்த துணை வேந்தர் லாரிகள் பத்திரமாக வெளியேறியதை அறிந்த மகிழ்ச்சியுடன் நடந்தே நூல் நிலைய முகப்புப் பக்கமாக வந்தார். தேர்தல் முடிவுகளை அறிந்ததும் தம் உள்ளுணர்வுகளை வெளிப்படுத்திக் கொள்ளாமல் முகமே இன்றித் தனியே பல்செட் மட்டும் சிரிப்பது போன்ற ஓர் இயல்பற்ற சிரிப்புடன் 'கங்ராஜுலேஷன்ஸ்' என்று பாண்டியனிடமும். வெற்றிபெற்ற மற்ற மாணவர்களிடமும் வந்து கைகுலுக்கினார் அவர். கண்ணுக்கினியாள் அதுதான் சமயமென்று அவரிடமும் ஒரு சாக்லேட்டைக் கொடுத்துவிட்டு, ''ஸார், வி வாண்ட் டு செலிப்ரேட் திஸ் விக்டரி... கைண்ட்லி கிவ் அஸ் பெர்மிஷன் டு அஸெம்பிள் ஹியர் அண்ட் ஹேவ் ஏ மீட்டிங்'' என்று வேண்டினாள். உடனே அவர் முகம் மாறியது. கடுமை தெரிந்தது.

''நோ... யூ கான்ட் ஹேவ் ஏ மீட்டிங் இன் தி யுனிவர்ஸிடி காம்பஸ். யூ கேன் ஹேவ் இட் இன் ஸம் அதர் ப்ளேஸ்.....'' என்று சொல்லிக் கொண்டே பின்புறம் கைகோத்தபடி அவர் விரைந்து திரும்பி நடந்துவிட்டார்.

எல்லாருக்குமே இப்படி மறுமொழி கூறியதற்காக அவர் மேல் கோபம் வந்தாலும் அந்த மகிழ்ச்சியான வேளையில் அவரோடு வாதாடிச் சண்டை போடுவதன் மூலம் தங்கள் உற்சாகத்தை வீணடிக்க விரும்பவில்லை அவர்கள்.

அங்கிருந்து வெளியேறிப் போய்ப் பல்கலைக் கழகத்து எல்லைக்கு அப்பால் அண்ணாச்சி கடை வாசலில் பொதுக் கூட்டமாகப் போட்டு வெற்றிவிழாவை நடத்திக் கொள்ளலாம் என்று எல்லா மாணவர்களும் முடிவு செய்தார்கள்.

உடனே பொன்னையா எல்லா மாணவர்களும் ஆறரை மணிக்குள் அண்ணாச்சி கடை முன்புறத்தில் வந்து கூட வேண்டும் என்று நூல் நிலைய முகப்பில் ஏறி உரத்த குரலில் அறிவித்துவிட்டான். கூட்டம் நடத்த அனுமதி வாங்க இரு மாணவர்கள் போலீஸ் நிலையத்துக்குப் புறப்பட்டார்கள். மாலைகள் வாங்கவும் மேடை போடவும் சிலர் ஓடினர்.

அப்போது மாலை ஐந்து மணிகூட ஆகவில்லை என்றாலும் அண்ணாச்சிக்கும், மணவாளனுக்கும் நேரிலேயே வெற்றிச் செய்தியைத் தெரிவித்து அவர்கள் ஆசியைப் பெறவேண்டும் என்று கருதியதால் பாண்டியன், மோகன்தாஸ், பொன்னையா, கண்ணுக்கினியாள் முதலிய சிலர் முன்கூட்டியே அண்ணாச்சி கடைக்கு விரைந்தார்கள்.

அவர்கள் அண்ணாச்சி கடையை நெருங்குவதற்கு முன்பு சிறிது தூரத்திலிருந்து பார்த்தபோதே அங்கு ஏதோ பெரிய கூட்டம் சூழ்ந்து நிற்பது தெரிந்தது. அங்கும் இங்குமாகச் சில போலீஸ்காரர்களும் தெரிந்தனர். அருகே நெருங்க நெருங்க ஏதோ அசம்பாவிதம் நிகழ்ந்திருப்பதற்கான அடையாளங்கள் அங்கே புலப்பட்டன. (தொடரும்)

# இதைப்போன்ற சந்தர்ப்பங்களுக்கு இப்பொழுதே பணம் சேமிக்கத் தொடங்குங்கள்!





உங்கள் மகளின் திருமணத்திற்கோ,
மகனின் பல்கலைக் கழகப் படிப்பிற்கோ,
ஏன், ஒரு வீடுகட்டுவதற்கும்தான்
உங்களுக்கு பணம் தேவைப்படும்.
அலஹாபாத் பாங்கினிடம் ஒவ்வொரு
வரின் தேவைகளுக்கேற்ற
சேமிப்புத் திட்டங்கள் இருக்கின்றன

உங்கள் பணம் எப்படிப் பெருகி
வளர்கின்றது என்பதை நாங்கள்
விளக்கிக்கூற காத்திருக்கின்றோம்.
உங்கள் தேவைகளுடன் அருகிலிருக்கும்
அலஹாபாத் பாங்கின்
கிளையுடன் தொடர்பு
கொள்ளுங்கள்.



**அலஹாபாத் பாங்க்**

ஹெட் ஆபீஸ்:
14, இந்தியா எக்ஸ்சேன்ஞ் பிளேஸ், கல்கத்தா-1

பொருளாதாரத்தின் அடித்தளத்தைப் பலப்படுத்துகிறது



# ராஜாஜியின் ஜெயில் டைரி

## 1921, டிசம்பர் 26உ

நேற்று இரவு ஆஸ்த்மா ஏற்பட்டிருந்தது. மருந்து உண்ணவில்லை. என்னுடைய அறை பதினொன்றரை அடி நீளம், எட்டரை அடி அகலம். கீழ்ப் பக்கத்தில் மட்டும் ஆறடி உயரத்தில் குறுக்குக் கம்பிகளுடன் கூடிய ஒரு சிறு சன்னல். அது சுமார் நாலரை அடி நீளம், ஓர் அடி அகலம். கூரை வளைவாகச் செய்திருக்கிறது. அறையின் நடு மத்தியில் நின்றால் பத்து அடி உயரமாக இருக்கும். அறையின் வாசல் கதவு பலகையால் செய்யாமல் கம்பிகளாலேயே செய்யப்பட்டதாகும். ஆறேமுக்கால் அடி உயரம், மூன்று அடி அகலம். இந்த மாதிரியான அறைகள் பதினெட்டு வரிசையாக மேற்குப்



பார்த்துக் கட்டப்பட்டிருக்கின்றன. அவற்றின் முன்னால் ஐந்து அடி அகலமுள்ள ஒரு வராந்தாவும் அதன் முன்னால் ஒரு பெரிய முற்றமும் இருக்கின்றன. எங்கள் அறைகளுக்குப் பின்னால் இருக்கும் சாக்கடையிலிருந்து துர்நாற்றம் அவ்வப்போது வந்து கொண்டிருக்கிறது.*

இந்தப் பதினெட்டு அறைகளில் தெற்குக் கோடியிலிருந்த நான்கு அறைகளில் தூக்குத் தண்டனை பெற்ற கைதிகளை அடைத்து வைத்திருக்கிறார்கள். கைகால்களைச் சுத்தம் செய்வதற்காகவும் உணவு உண்பதற்காகவும் அவர்களை இடையிடையே வெளியே கூட்டிக் கொண்டு வருகிறார்கள். முற்றத்தின் தென்மேற்கு மூலையில் ஒரு தண்ணீர்க் குழாய் இருக்கிறது. ஆனால் அநேக சமயங்களில் அதில் ஜலம் வருவதில்லை. அதனால் எங்களுக்கு ஒரு பானையில் ஜலம் ஊற்றி வைத்து விடுகிறார்கள். இரண்டு வேப்ப மரங்கள், ஒரு தேக்கு மரம், ஓர் அரசமரம் ஆக நான்கு மரங்கள் எங்கள் முற்றத்தை அலங்கரிக்கின்றன. அந்தப் பெரிய அரச மரத்தினடியில் சிறிய மேடைகளை அமைத்து வைத்திருக்கிறார்கள். கைதிகள் தங்கள் உணவுத் தட்டுக்களை அவற்றின் மீது வைத்துக் கொள்ளுகிறார்கள். அரச மரம் நல்ல நிழல் கொடுக்கிறது. ஆனால் காகங்களின் தொல்லை அதிகமாயிருக்கிறது. எங்கள் ஒவ்வொருவருக்கும் ஓர் அலுமினியத் தட்டும், அலுமினியக் குவளையும் கொடுத்திருக்கிறார்கள். நாங்கள் எங்கள் உணவை முற்றத்தில் நின்று கொண்டோ, அல்லது வெறுந் தரையில் உட்கார்ந்து கொண்டோதான் உண்ண வேண்டியதாயிருக்கிறது. நாங்கள் பாராக்காரர்களுடைய சிறிய குறடுகளின் மீது உட்கார்ந்து கொண்டு சாப்பிட்டு வருகிறோம். ஆனால் அது தவறு என்றே எண்ணுகிறேன்.

தினந்தோறும் மாலையில் கதவை இழுத்துப் பூட்டுவதற்குமுன், தோட்டி ஒவ்வோர் அறையிலும் இரண்டு மண் சட்டிகளைக் கொண்டு வந்து வைக்கிறார். இவை துர்நாற்றமுள்ளவைகளாயிருப்பதால் அவற்றை அறையில் பக்கத்தில் வைத்துக் கொண்டு தூங்குவதற்கு அருவருப்பாயிருந்தது.

அந்தச் சட்டிகளையும் அவர்கள் தினந்தோறும் வேறு வேறு அறையில் மாற்றி வைத்து விடுகிறார்கள். ஒன்றைக் கொண்டு ஒன்றை மூடி வைக்கலாம் என்று பார்த்தேன். ஆனால், சட்டிகளின் அடிப் பாகம் உருண்டிருந்தபடி



* துர்நாற்றத்துக்குக் காரணம் சிறை வார்டர்கள் எங்கள் அறைகளுக்குப் பின்னால் சிறுநீர் கழித்ததே. பல முறை புகார் செய்த பிறகு இப்பழக்கம் நான் விடுதலை பெறும் நாள் நெருங்குகையில் நின்றது.

யால் மூடி வைத்தால் இரண்டும் உருண்டு கீழே விழுந்துவிடக் கூடியதாக இருக்கின்றன.

இங்கே, சிறையில் நாசூக்காக நடக்க முடியவில்லை. கொலைக் குற்றம் செய்து நீண்ட காலமாகத் தண்டனை பெற்ற கைதிகள்கூட நல்லவிதமாகவே நடக்கின்றார்கள். சிறைக் கட்டுப்பாடுகள் காரணமாய் நாசூக்கு இன்றி நடக்கும்படியிருக்கிறதேயன்றி கைதிகள் தாங்களாகவே அநாகரிகமாக நடந்து நான் பார்க்கவில்லை.

தூக்குத் தண்டனை பெற்ற கைதிகளைக் காவல் காக்கும் வார்டர்கள் இரவு முழுவதும் கூச்சல் போட்டவண்ணமாக இருக்கிறார்கள். "நாம் அடிக்கடி மாறி விடுகிறோம். ஆனால் கைதிகளோ இரவு முழுவதும் இந்தக் கூச்சலுக்கு ஆளாகி வருகிறார்கள்" என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்ப்பதாகத் தெரியவில்லை. இரவில் முன்னேரத்தில் மகமது கௌஸ் அழகாகத் தோத்திரப் பாடல்களைப் பாடுவார். அந்த இசை வெள்ளத்தை யாரும் கெடுக்காமலிருந்தால் அதை அங்குள்ள கைதிகள் கேட்டு நல்லுணர்ச்சி பெறுவார்கள். ஆனால் அதற்கு இடையூறாக இருக்கிறது வார்டர்கள் சளசளவென்று உபயோகமற்ற கீழ்த்தரமான பேச்சுக்களைப் பேசுவது.

என்னுடைய உடைகள் பட்டணத்திலிருந்து வெளுத்து வந்துவிட்டன. என்னுடைய பணத்திலிருந்து எனக்கு வெள்ளைக் கடுதாசியும், உடைகளும், மெழுகுவர்த்திகளும், தீப்பெட்டியும், சோப்பும், பற்பொடியும் வாங்கித் தரும்படி சிறை அதிகாரியிடம் கூறினேன். அந்தப் பொருள்களை அவர் மாலையில் கொண்டு வந்து தந்தார். சிறையில் நல்ல செருப்புக்கள் தைக்கிறார்கள். நான் ஒரு ஜதை வாங்கிக் கொண்டேன்.

புதிதாக ஐந்து ஒத்துழையாமைக்காரர்கள் வந்திருப்பதாகவும் அவர்களை வெளியில் உள்ள தனிச் சிறையில் அடைத்து வைத்திருப்பதாகவும் அறிகின்றேன்.

ஆந்திர தேசத்திலிருந்து வந்திருந்த கைதி ஒருவர் ஒத்துழையாமைக்காரர் அல்ல — குற்றம் செய்து தண்டனை பெற்ற சாதாரணக் கைதி. "மூன்று வருஷங்கள் ஒழுங்காக நடந்து கொண்டால் சுயராஜ்யத்தைக் கொடுத்து விடுவார்கள் என்று பத்திரிகைகளில் எழுதியிருப்பதைப் பார்த்தேன்" என்று கூறினார். வேல்ஸ் இளவரசர் அரசியல் சீர்திருத்தத்தின் லட்சியம் பற்றிப் பேசியது குறித்து இவர் ஏதேனும் கேள்விப்பட்டிருப்பாரோ, என்னவோ?

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியாரும், மிதவாதத் தலைவர்களும் தங்கள் ஆலோசனைகளின் கடைசிக் கட்டத்தை இன்று அடைந்து விடுவார்கள் என்று எண்ணுகிறேன். சகல தேச மக்களுக்கும் வழி காட்டும் சர்வேசுவரன் நமக்கு நல் வழியைக் காட்டி மனோ தைரியத்தையும் வைராக்கிய புத்தியையும், போதுமான பலத்தையும் கொடுத்து அருள் புரிவாராக!

## சிறு குறை பெரிய தோல்வி!

கப்பலின் அடித்தளத்தில் சிறு ஓட்டை ஏற்பட்டிருப்பதைக் கவனக் குறைவால் எவரும் பார்க்கவில்லை. கப்பல் நடுக் கடலுக்குச் சென்றபோது துவாரம் பெரிதாகி, அதன் வழியாகத் தண்ணீர் உள்ளே புகத் தொடங்கியது. அடைக்க முடியாத அளவுக்குப் பெரிதாகியது. கவனக் குறைவால் மாலுமி இதைப் பார்க்கத் தவறினான். கடைசியில் கப்பல் கடலில் மூழ்கியது. பாருங்களேன், சிறிய ஓட்டை ஏற்படுத்திய பேராபத்து!

இதைவிடப் பயங்கரமான விபத்தை ஓர் ஆணி ஏற்படுத்தி விட்டது. போர்க்களம். இரு படைகளும் எதிர் எதிரே பொருதிப் போராடிக் கொண்டிருக்கின்றன. ஒரு பக்கத்துப் படையின் பிரதம தளபதி குதிரை மீதேறி முன்னணிக்கு விரைகிறான். அவனுடைய துணிச்சலான திட்டத்தினால் வெற்றி ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. குதிரையின் குளம்பில் அறைந்திருந்த லாடத்திலிருந்து ஓர் ஆணி கழன்று விழுந்து விட்டது. எதிரிகள் சூழ்ந்து தளபதியைக் கொன்று விட்டார்கள். வழிகாட்டத் தலைவன் இல்லாத படையின் கதி என்னவாகும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. அந்த ஓர் ஆணிதான் படையின் தோல்விக்குக் காரணமாயிற்று என்பதை அறியும்போது வியப்பாகத்தான் இருக்கிறது. எனினும் நிகழ்ந்தது அதுதானே?

'இவ்வளவு போதும், பரவாயில்லை' என்று சொல்லித் திருப்திப்படுபவர் பலர் உள்ளனர். காரியம் முடிந்த பிறகுதான் அவர்களுக்குப் பல சிறிய விஷயங்களைக் கவனிக்காமல் இருந்துவிட்டோமே என்பது புலப்படும். இப்படிக் கவனக் குறைவால் காரியங்கள் எல்லாம் பாழாகும்.



அக்கறை இல்லாமல் 'பத்துக் காசுதானே, இருபது காசுதானே, பரவாயில்லை' என்று கண்டபடி செலவு செய்பவனுக்கு விரைவிலேயே பொருளாதார நெருக்கடி ஏற்பட்டுவிடும். அவன் எதையும் உருப்படியாகச் செய்ய முடியாது. இதேபோல் ஐந்து நிமிடமும், பத்து நிமிடமும்தானே என்று நேரத்தை அலட்சியமாகச் செலவு செய்பவருக்கு எந்தப் பணியையும் சரிவர நிறைவேற்ற முடியாது.

கே. பி. கேசவ மேனன்
தகவல் : சௌரி

# உங்கள் அனல்உலை சுட்ட கற்கள் காலதாமதமாக இயங்கினால் ஒவ்வொரு கணமும் பணம் விரயமாகும்

இதைவிட அதிமோசம் இது எப்பொழுது இயங்கத் தொடங்குமோ என்று தெரிந்து கொள்ள முடியாதது.

ஆனால் இந்தப் பிரச்னை உங்களைத் தீண்டாது. நீங்கள் உங்கள் தேவைகளை ஒரிஸ்ஸா சிமெண்டிடம் ஒப்படைத்து விட்டால், இதில் காலதாமதம் கிடையாது; எங்களிடம் சால்ஜாப்புகள் இல்லை. உங்களுக்குக் குறிப்பிட்ட காலத்தில் உங்கள் அனல்உலை சுற்கள் வந்தடையும்.

நாங்கள் நீண்டகால ஆர்டர்களையும் ஏற்றுக் கொள்கிறோம். நீங்கள் எங்கள் டால்மியா அனல்உலை சுட்ட கற்களை வாங்கினால் அதன் தரம் நிச்சயம் உயர்தரமாக இருக்கும்.



SOVAM/OCL/7112

## ஒரிஸ்ஸா சிமெண்ட் லிமிடெட்

தொழிலகம்: ராஜ்கங்ப்பூர் ஜில்லா, சுந்தர்கர், ஒரிஸ்ஸா
தலைமை அகம் 4. சிந்தியா ஹவுஸ் புதுதில்லி-1



# இளைஞர் சமுதாயம்

## 22. மகாதானபுரத்தில் மகத்தான சேவை

நீர் வளம், நிலவளம் இரண்டும் மிகுந்து விளங்குவது மகாதானபுரம். இது திருச்சி ஜில்லாவில் உள்ள ஒரு கிராமம். இதுபோன்ற சில சிறிய ஊர்களுக்குத் தபால் கார்டுதான் சுலபமாகப் போய் வர முடியும். மனிதர்கள் நேரில் போனால் புழுதி ரோட்டில் பாத யாத்திரை செய்து அவதிப்பட நேரும். சில கிராமங்களுக்குச் சொந்தமாக ரயில்வே ஸ்டேஷன் இராது; சொந்தமாக டெலிபோன் வைத்துக் கொள்ளாதவர்கள் டெலிபோன் வைத்துக் கொண்டிருக்கும் பக்கத்து வீட்டுக்காரரையோ, எதிர் வீட்டுக்காரரையோ சதா தொந்தரவு செய்து கொண்டிருப்பார்கள். அதே மாதிரி ஸ்டேஷன் இல்லாத ஊரில் இருப்பவர்கள் பக்கத்து ஊர் ஸ்டேஷனைத் தான் உபயோகப்படுத்தும்படி இருக்கும். ஆனால் மகாதானபுரத்துக்கு அந்தக் குறை இல்லை. 'மகாதானபுரம்' என்ற பெயரிலேயே ஸ்டேஷன் இருக்கிறது. அதுவும் மதிப்புக்குரிய Broad Guage Lineல் இருக்கிறது. அதிலும் இன்னொரு வசதி! ஸ்டேஷன் ஊருக்குள்ளேயே இருக்கிறது. பஸ்ஸும் பக்கத்திலேயே நிற்கிறது. வாய்க்கால் நிறைய ஜலம் போகிறது; கொஞ்சம் நடந்தால் அகண்ட காவேரி. எங்கே பார்த்தாலும் பசுமை. இந்த ஊரின் அமைதி என்னைப் பெரிதும் கவர்ந்து விட்டது.

இவ்வூர் யுவர் சங்கம் சாதித்திருக்கும் சாதனைகளைக் கேட்டால் யாருமே அயர்ந்து தான் போவார்கள். இச்சங்கத்தின் தலைவர் வி. ராஜாராம், இவ்வூர் கிராமமுன்சிப்; பொதுத் தொண்டில் ஆர்வம் மிக்க இளைஞர். என்னை அன்போடு வரவேற்று உபசரித்தார். அங்கத்தினர்கள் அனைவரும் கூடி உற்சாகமாக என்னைச் சூழ்ந்து கொண்டனர்.

"கிராமப் பகுதிகளிலுள்ள இளைஞர் சங்கங்களுக்கு நீங்கள் வந்து பார்த்து எழுதுவீர்கள் என்று முதலில் நாங்கள் நம்பவில்லை. பிறகு நீங்கள் சில கிராமங்களுக்குச் சென்று எழுதிய கட்டுரைகளைக் "கல்கி"யில் பார்த்த பிறகுதான் எங்களுக்கு நம்பிக்கை பிறந்தது" என்றார் தலைவர் வி. ராஜாராம்.

"ஏன் உங்களுக்கு அத்தனை அவநம்பிக்கை?" என்று கேட்டேன் நான்.

"பொதுவாக, கிராமத்துப் பிரச்னைகளைப் பகிரங்கமாக அனைவருக்கும் எடுத்துச் சொல்ல ஆளில்லை. நம் நாட்டில் மொத்தமுள்ள தொழிலாளர்களில் நூற்றுக்கு எட்டுப் பேர் அல்லது பத்துப் பேர் மட்டுமே ஆலைத் தொழிலாளர்கள். ஐம்பது சத விகிதத்தினர் கிராமங்களில் சாகுபடி வேலை பார்ப்பவர்கள் தாம். ஆயினும் நகர்ப்புறங்களில் உள்ள ஐந்து அல்லது பத்து சதவிகிதத்தினரின் பிரச்னைக்கே அதிக முக்கியத்துவம் கிடைத்து விடுகிறது" என்று கூறிச் சற்று நிறுத்தினார் அன்பர் ராஜாராம். இதுதான் சமயமென்று நான் கேள்வி கேட்க ஆரம்பித்தேன்.

"கிராம மக்களின் பிரச்னைகள் உரிய கவனம் பெறவும் முக்கியத்துவம் அடையவும் நீங்கள் முயற்சி எடுக்கலாமே?"

"அதற்காகத்தான் மகாதானபுரம் யுவர் சங்கத்தை ஆரம்பித்திருக்கிறோம். இச்சங்கம் இனம், கட்சி, மதங்களுக்கு அப்பாற்பட்டது. இதன் மூலம் கிராம மக்களிடையே ஒற்றுமையை வளர்ப்பது, கிராம முன்னேற்றத்துக்குத் தேவையானவைகளை அலசி ஆராய்ந்து சம்பந்தப்பட்ட இலாக்காக்களுக்குத் தெரிவித்து ஆவன செய்வது, பொது மக்களின் சௌகரியங்களுக்கு ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வெளியிடுவது என்று தீர்மானம் செய்திருக்கிறோம். 1-2-1967 அன்று மகாதானபுரம் யுவர் சங்கம் ஆரம்

☐ 'வரதட்சிணை' என்னும் ரேடியோ கலந்துரையாடலில் பங்கு கொண்ட யுவர் சங்கத்தார்.

☐ யுவர் சங்கத்தினருக்கு உற்சாகப் பொழுதுபோக்கு.



பிக்கப்பட்டது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமை மாலையும் கூட்டம் நடைபெறு கின்றது.''

''இந்தச் சங்கம் ஆரம்பித்த பிறகு நீங்கள் செயலாற்றி வெற்றி கண்டுள்ள ஏதேனும் ஒரு பொதுத் தொண்டைக் குறிப்பிட முடியுமா?''

''ஆகா! எங்கள் முதல் முயற்சியே வெற்றி தான்! சங்கம் ஆரம்பித்தது 1—2—67. 19-2-67 அன்று இரு தீர்மானங்கள் கொண்டு வந்து நிறைவேற்றினோம். மகாதானபுரம் கிராமத்துத் தெருக்களில் புழுதி மண் அதிக மாகிப் போக்குவரத்துக்கு மிகவும் இடைஞ்ச லாக இருந்தது. அதை அகற்றித் தெருக் களைச் சுத்தம் செய்ய வேண்டும் என்பது முதல் தீர்மானம்.''

''உங்கள் சங்கத்தின் முதல் தீர்மானமே முதல்தரமான தீர்மானமாக இருக்கிறதே! உடனே அது கவனிக்கப்பட்டு விட்டதா?''

''ஆமாம். மகாதானபுரம் ஊராட்சி ஒன்றி யத்தின் தலைவர் திரு கே. பெரியசாமி அவர் களுடன் யுவர் சங்கத்தின் மூலம் தொடர்பு கொண்டோம். அவரது அரிய முயற்சியால் முந்நூறு ரூபாய் செலவில் தெருக்களில் உள்ள புழுதி மண்ணை வாரி எடுத்து அப்புறப் படுத்திப் போக்குவரத்துக்கு வசதி செய் யப்பட்டது.''

''பாராட்டத் தக்க வெற்றிதான். இன் னும் ஏதாவது பெரிய திட்டம் வைத்திருக் கிறீர்களா?''

''வைத்திருக்கிறோம். 1880ம் ஆண்டு தொடங்கப்பட்டுத் தொண்ணூற்றிரண்டு ஆண்டு காலமாக நடந்து வரும் ஆரம்பப் பள்ளிக்கூடத்துக்குக் காற்றோட்டமுள்ள நல்ல கட்டடம் கட்டுவதென்று தீர்மானித்திருக் கிறோம். பெங்களூர், வாழைப்பழ வியாபாரி யும், பெருநிலக் கிழாருமான திரு வி. ஜகந் நாதன் அவர்கள் தலைமையில் ஒரு கட்டிடக் கமிட்டி அமைத்திருக்கிறோம். அருகிலுள்ள கிருஷ்ணராயபுரம் ஊராட்சி ஒன்றியத்தின் பெருந் தலைவர் திரு என். பி. ஆண்டியப்பன் அவர்கள் மேற்படி கமிட்டியின் உபதலைவ ராக இருக்கச் சம்மதம் தெரிவித்திருப்ப தோடு ஊராட்சி ஒன்றியத்தினால் எந்த அளவு உதவி செய்ய முடியுமோ, அவ்வள வையும் செய்வதாக மனமுவந்து வாக்களித் துள்ளார்கள். பழைய கட்டடத்தை இடித்து விட்டு, உட்காரப் பெஞ்சுகள், தரைப் பல கைகள், கரும் பலகைகள் ஆகிய பள்ளிக் கூடத்துக்கு இன்றியமையாத எல்லா வசதி களுடனும், ஓடு போட்டு, சிமெண்ட் சுவர்கள் வைத்து நல்ல முறையில் கட்டடத்தைக் கட்டி முடிக்க ரூபாய் பத்தாயிரம் தேவைப்படு கிறது...''

''அதற்கு என்ன செய்யப் போகிறீர்கள்?''

''பொதுமக்களின் தாராள சிந்தையைத் தான் நம்பியிருக்கிறோம். ரூபாய் ஐயாயிரத் துக்கு அதிகமாக நன்கொடை அளிக்க முன் வரும் நபருக்கு ஊக்கம் அளிக்க ஓர் ஏற்பாடு செய்திருக்கிறோம். அவர் விரும்பும் பெயரில் பள்ளிக்கூடத்தின் பெயரை வைக்கத் தீர் மானித்திருக்கிறோம். ரூபாய் இரண்டாயிரம் தர இசைபவர் பெயரில் ஒரு வகுப்பு அறையை நடத்துவோம். ரூபாய் இருபத்தைந்துக்கு அதிகமாக நன்கொடை அளிப்பவர்களின் பெயர்களைப் பலகைக் கற்களில் (Plaque) பதித்துப் பள்ளிக் கூடத்தின் முன் அறையில் வைப்போம்....''

இவ்வாறு பேசிக் கொண்டே தலைவர் ஒரு கத்தை ஃபைல்களை எடுத்து என் முன்னே போட்டார். புரட்டினேன். அத்தனையும் தஞ்சை ரயில்வேயுடன் ஈரோடு — திருச்சி லைனில் அதிக வண்டிகள் விட வேண்டும் என்பதற்காக யுவர் சங்கம் நடத்திய கடிதப் போக்குவரத்து!

''இதைப் பார்த்தாலே எனக்கு மயக்கம் வரும்போல் இருக்கிறது. ரயில்வேயுடன் போராடி யுவர் சங்கம் அடைந்த வெற்றியைச் சுருக்கமாக நீங்களே சொல்லுங்கள்'' என் றேன்.

''இதுவரையில் இன்ன இன்ன ரயில்களை இந்த இந்த நேரத்துக்கு விட வேண்டும் என்று நாங்கள் ரயில்வேக்கு எழுதிக் கொண்டிருந் தோம். இப்பொழுது — எங்கள் இடைவிடாப் போராட்டத்துக்குப் பிறகு — 'நாங்கள் ரயில் வண்டிப் போக்குவரத்தின் கால, நேரங்களில் இன்னின்ன மாறுதல்களைச் செய்யலாம் என்றிருக்கிறோம். உங்களுடைய சௌகரியம் எப்படி?' என்று கேட்டு ரயில்வேயிலிருந்து யுவர் சங்கத்துக்குக் கடிதம் வரும் அளவுக்கு முன்னேறி யிருக்கிறோம். எங்கள் வேண்டு கோள்களுக்கு இணங்கிப் பல சௌகரியங் களைச் செய்து கொடுத்திருக்கிறார்கள்'' என்றார் யுவர் சங்கத் தலைவர்.

யுவர் சங்கத்தில் பட்டிமன்றங்கள் நடை பெறுகின்றன. இலக்கியப் பிரச்னைகள் பற்றி வாதப் பிரதிவாதங்கள் நடக்கின்றன. மகா தானபுரம் யுவர் சங்கம் மிகவும் நல்ல முறை யில் நடக்கும் இளைஞர் சங்கம். இதனைப் பாராட்டி எழுதிய தொழில் மேதை திரு ஜி.டி. நாயுடுவின் கடிதத்தில் சில வரிகளைக் கீழே தந்திருக்கிறேன்.

''... ஐந்து ஆண்டுகளாக இந்த இளைஞர் மன்றம் கெடாமல் இருந்து எல்லோருக்கும் நன்மை பயக்கும்படியான வேலைகளில் ஈடு பட்டிருப்பதே மிகவும் போற்றத் தக்கதாகும். ஏனெனில் இந்தக் காலத்தில் சீக்கிரம் கெட்டுப் போவதற்கு என்னவெல்லாம் வேண் டுமோ அவை யெல்லாம் நம்மிடையே உரு வாகிக் கொண்டு வருகின்றன. காலேஜ் மாண வர்கள் படிப்பதை விட்டு அரசியலில் சேர்ந்து கெட்டுப் போகிறார்கள். உங்கள் சங்கம் இளைஞர்களுக்கென்று நல்லது செய்யா விட்டாலும் சரியே; கெட்டுப் போகாமல், கெட்ட வழியில் செல்லாமல் இருப்பதே போதும். மாணவர்கள் உயர்நிலைப் பள்ளி யோடு படிப்பை நிறுத்திக் கொண்டு காலே ஜுக்குப் போகாமல் எந்தத் தொழிலையாவது செய்வது நல்லது என்பதைச் சொல்ல ஆசைப் படுகிறேன்.''

அதிசய மனிதரின் பொருள் பொதிந்த இந்த வாழ்த்து மகாதானபுரம் யுவர் சங்கத் துக்கு மட்டுமில்லை; இளைஞர் சமுதாயத் துக்கே உரியது.

—ஸோமாஸ்

தங்கப் பதுமையைப் போலுள்ள நங்கைக்கு
மங்கல நாணேற வில்லை — ஒரு
மன்னவன் வந்திட வில்லை
எண்ணம் இனித்திட வில்லை

அங்கத் திலாகட்டும் அறிவினி லாகட்டும்
தங்கும் குறையொன்று மில்லை — எனில்
தாலியு மேறிட வில்லை
தாபமுந் தீர்ந்திட வில்லை.

பொங்கும் இளமையில் பூரித்து வாழ்ந்திடப்
பூவைக்குத் திருமண மில்லை — இவள்
பூத்தும் பயனிங்கு இல்லை
புத்தியில் நிம்மதி இல்லை.

வார்த்த சிலையென வாழு மிவளுக்கு
வரனுக்குப் பஞ்சமும் இல்லை — வந்த
வரனுக்குத் தட்சணை என்றே
சவரனுங் கொஞ்சமு மில்லை.

நாடக மைவிழி ஆடகப் பொன்மணி
கேடொன்று செய்தவள் இல்லை — கற்பு
கீர்த்தி குறைந்தவள் இல்லை
சீர்த்தி பிறந்திட வில்லை

தெய்வத்தைப் பெண்ணுரு வாக்கி வணங்கிடும்
கைவந்த கலையினைக் கற்றோம் — எனில்
கைவிட்டுப் பெண்களை வாழ்ந்தோம்
காசினி ஏசிடத் தாழ்ந்தோம்

காசுக்குத் தாலியைக் கட்டிட ஓடிடும்
காளைக்கு வெட்கமு மில்லை — பணங்
காசெனில் பாவங்கள் இல்லை
கற்றிவன் நற்பலன் இல்லை.

மறவர் தமிழ்க்குடி மண்ணில் பிறந்தவர்
மானம் இழந்திட லாமோ — நம்
மாதருந் தாழ்ந்திட லாமோ ?
வேதனை சூழ்ந்திட லாமோ?

கரும்பு சுவைத்திடக் கூலி விரும்பிடும்
காதகர் ஆகிட லாமோ? — முல்லை
அரும்பு வதங்கிட லாமோ ?
அவனி சிரித்திட லாமோ?

— ஜோதி பத்மநாபன்



# எங்கே நிம்மதி?

# 36. சிக்கல் தீர்ந்தது

மருதாசலம், டி. ஐ. ஜி. ஸி. ஐ. டி. நடராஜனிடம் கூறியது:

வனஜாவும் நானும் மற்றவர்களுக்கு முன்னால் ஹில்டாப் ரோட்டில் ஏறிப் போய் அங்கே தீர்க்கதரிசனப் பாறையில் சில நிமிஷங்களை ஏகாந்தமாகக் கழிக்க எண்ணி விரைந்தோம். உச்சியை அடைந்ததும் வனஜாவை என் அருகில் இழுத்து அணைத்துக் கொண்டேன். திரும்பிய பக்கமெல்லாம் மலைச் சிகரங்களும் கானகங்களும் மட்டுமே கண்களுக்குத் தென்பட்ட அந்த இடத்தில் நாங்கள் இருவர் மட்டுமே அத்தருணத்தில் இருந்ததானது, ஆண்டவன் ஆதமையும் ஏவாளையும் படைத்து உலகில் உலவ விட்ட அந்த ஆதிநாளை எனக்கு நினைவூட்டியது. இதை நான் வனஜாவிடம் சொன்னபோது, அவள் சிரித்து இன்னும் நெருங்கி வந்து ஒண்டிக் கொண்டு ''ஒரே ஒரு வித்தியாசம் இருக்கிறதே!'' என்று ரகசியம் பேசும் குரலில் கூறினாள்.

நாங்கள் ஆடை புனைந்திருப்பதைத் தான் அவள் குறிப்பிடுகிறாள் என்பது எனக்குப் புரிந்து விட்டது. சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்த வேகத்தில் ஆசைகளும் சிலிர்த்தெழுந்தன. அவள் வதனத்தை நோக்கி என் முகம் கீழிறங்கிய அதே சமயம் என் கண்கள் ஒரு மரத்தின் மறைவிலிருந்து வெளிப்பட்ட தினகரனைப் பார்த்துவிட்டன. வீட்டை வெறுத்துவிட்டு அன்றிரவு ஓடிப் போனவன் கொடைக்கானலுக்கு வந்திருப்பான் என்று நாங்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அப்படியே வந்திருந்தாலும் நாங்கள் இருவரும் தனிமையை நாடி வந்த அதே இடத்துக்கு அதே நேரத்தில் அவனும் வந்து, ஒளிந்திருந்து எக்கச்சக்கமான ஒரு நிலையில் எங்களைப் பார்த்துவிட்டுத் திடுதிப்பென்று வெளிப்பட்டதை என்னென்பது? விதி அல்லது கடவுளின் சித்தம் என்றுதான் அதைக் குறிப்பிடவேண்டும்.

''ஆபாசப் பைசாசங்களே!'' என்று கத்திக் கொண்டு அவன் வெறி பிடித்தவன்போல் கண்கள் சிவக்க எங்களை விழித்துப் பார்த்தபடி விரைவாக முன்னேறி வந்தான். ''தீர்க்க தரிசனப் பாறை என்ற இந்தப் பெயர் கூட உங்கள் உள்ளத்தில் உயர்ந்த எண்ணங்களைத் தோற்றுவிக்கவில்லையா? மலைகளும் பள்ளத்தாக்குகளும் கானகங்களும் மிகுந்த இந்த மாட்சிமை மிக்க இடம் உங்களுக்கு ஆண்டவனின் அலகிலா விளையாட்டை நினைவுபடுத்தவில்



## ஸைக்கோ ஸாரநாதன்



கி. ராஜேந்திரன்

லையா? இங்கு வந்து நின்று இந்தக் காட்சியைப் பார்த்தபிறகும் உங்கள் உள்ளங்களில் மட்ட ரகமான எண்ணங்களே எழ வேண்டுமா? உங்களைப் போன்றவர்கள் இந்த உலகில் வாழவே தகுதியற்றவர்கள்'' என்று கனத்த குரலில் கூறியபடி எங்களை நோக்கி நடந்தான்.

பேயையோ பிசாசையோ பார்த்துவிட்டது போல் நாங்கள் மிரண்டோம். சொல்லுக்கேற்பச் செயலிலும் ஈடுபடுவான்; நிச்சயம் எங்களைப் பள்ளத்தாக்கில் தள்ளிவிட முயலப் போகிறான் என்பது அவன் கோபாவேசமான முகத்தைப் பார்த்த உடனே தெரிந்தது. பீதியுடன் நாங்கள் நிற்கையில், எங்களைப் பாதுகாத்துக் கொள்ளத் தயாராகையில் எதிர்பாராத அச்சம்பவம் நிகழ்ந்தது.

தீர்க்கதரிசனம் பெற அந்தப் பாறைக்கு வந்த யாரோ ஒருவன் வயிற்றுப் பசியையும் மறக்காமல் தணித்துக்கொண்டு வாழைப் பழத்தை விழுங்கிவிட்டுத் தோலியைப் போட்டிருக்கிறான். தினகரனின் செருப்பு அதில் அழுந்தியது. அடுத்த கணம் வழுக்கி விட்டுவிடவே, அவன் 'வீல்' என்று கூக்குரலிட்டவாறே, தலை குப்புறப் பள்ளத்தாக்கில் விழுந்தான். நாலு விநாடிகள் அவன் கத்தியதானது மேலும் இரண்டு விநாடிகளுக்கு மலைச் சரிவுகளில் எதிரொலித்தது.

அந்தச் சத்தத்தைக் கேட்டு விட்டு எங்களுடன் வந்த இதர சுற்றுலாப் பயணிகள் அவசரம் அவசரமாக உச்சிக்கு வருவார்கள் என்று எதிர்பார்த்தேன். அவர்கள் நாங்கள் இருவரும் அங்கிருப்பதைக் கண்டால் என்ன நினைப்பார்கள்? கீழே விழுந்தவனின் உடல் மேலே கொண்டு வரப்பட்டு, அவன் தினகரன் என்பதையும் தெரிந்து கொண்டதும் என்ன முடிவுக்கு வருவார்கள்? நாங்கள்தான் அவனைத் தள்ளிவிட்டோம் என்றுதான் எல்லோரும் தீர்மானிப்பார்கள். முன்கூட்டியே தெரிந்தோ அல்லது யதேச்சையாகவோ தினகரன் அங்கு வந்து எங்களைப் பார்த்து விட்டான்; வாக்குவாதம் நடந்தது. எங்கள் காதலுக்கு இடையூறாக இருக்கும் தினகரனைக் கொன்று விட நாங்கள் இருவரும் எண்ணிப் பள்ளத்தாக்கில் தள்ளி விட்டோம் — இப்படித்தான் யாருக்குமே தோன்றும். தற்செயலாக வாழைப்பழத் தோலில் சறுக்கி விழுந்து விட்டான் தினகரன்— ஆக்ஸிடெண்ட் — என்று சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள். இப்படிச் சில விநாடிகளுக்குள் நான் யோசித்து வனஜாவிடமும் என்னுடைய கருத்தைக் கூறினேன்.

இருவருமே பயந்து போனோம். ஓடி விடத் தீர்மானித்தோம். பாதையோடு





இறங்கினால் எதிரே நண்பர்கள் வந்து கொண்டிருப்பார்கள். ஆகவே வேறு வழியாகத்தான் போக வேண்டும்.... பாதைக்கு ஒரு புறம், ப்ளம், பேரிக்காய்த் தோட்டம். மறைப்பு இல்லை. எல்லோரும் நாங்கள் ஓடுவதைப் பார்க்க இயலும். இன்னொரு புறம் அடர்ந்த காடு. மறைந்து செல்ல வேண்டுமானால் அதனூடேதான் போக வேண்டும். நாங்கள் புதர்களையும் செடிகளையும் விலக்கி வழி ஏற்படுத்திக் கொண்டு விரைந்தோம். நகரை நோக்கிச் செல்லும் பிரதான சாலையை அடைந்து அங்கிருந்து திரும்பி மீண்டும் ஹில்டாப் ரோட்டின் ஆரம்பக் கட்டத்துக்கே வந்து சேர்ந்தோம். பெருமூச்சு வாங்கியது. கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு இயல்பாக இருப்பது போல் நடித்தோம். அந்த அவசரத்தில் புடவை சற்றுக் கிழிந்ததை நாங்கள் கவனிக்கவில்லை.

''இதுதான் மருதாசலம் கூறிய கதை'' என்று சொல்லி நிறுத்தினார் நடராஜன்.

''இதை நீங்க நம்பறேளா? வாழைப் பழத் தோலாவது சறுக்கி விடவாவது? சின்னப் பசங்களுக்கு எழுதற கதை மாதிரின்னா இருக்கு?'' என்றார் பத்மநாபன்.

''நானும் இதையேதான் கேட்டேன். யாருக்கய்யா காது குத்தறே? அந்தப் பக்கம் முழுதும் போலீசார்

நல்லா தடயம், சாட்சியம் ஏதாவது அகப்படுமான்னு தேடினுங்களே. சின்ன விஷயமானலும் அலட்சியப் படுத்தாமல் என்கிட்டே வந்து சொல்லணும்னு உத்தரவு போட்டிருந்தேனே. வாழைப் பழத் தோல் கிடந்ததாக ஒரு கான்ஸ்டபிள் கூடச் சொல்லலேயே?'' என்றேன்.

''அதுக்கு மருதாசலம் என்ன பதில் வைச்சிருந்தான்?'' என்று பத்மநாபன் வினவினர்.

''தினகரன் விழுந்தபோது அந்தத் தோலும் பள்ளத்தாக்கில் விழுந்துடுச்சாம்! 'அது எங்கே போய் எந்தப் புதர் அல்லது மரக் கிளையில் சிக்கிக் கொண்டதோ தேடிக் கண்டுபிடிக்கிற காரியமா?' என்று மருதாசலம் என்னைத் திருப்பிக் கேட்டான்!''

''பிறகு?'' என்ருள் அம்புஜம்.

'' 'பொய்! அத்தனையும் பொய்!' என்று சொல்லி அவனை இன்னும் கொஞ்சம் கவனிச்சேன்!''

''அதாவது உதைச்சேன்.''

''ஆமாம்! 'என்னை எவ்வளவு வேணுமானலும் அடிங்க; ஆனல் நான் அடி வாங்கினதா வெளியிலே மட்டும் சொல்லிடாதீங்க'ன்னு மருதாசலம் கெஞ்சினன்! பெரிய மனுஷனும் அவன்! தலை குனிய நேரிடுமாம்! அப்படி அவன் கேட்டுக் கொண்டிருக்க வேண்டிய அவசியமே இல்லை; ஏன்ன ரூல் பிரகாரம் அவனை அடிக்கவோ, உதைக்கவோ எனக்கு அதிகாரம் கிடையாது. அதிகார எல்லையை மீறித்தான் நான் நடந்துக்கிட்டேன். அதைப் போய் நான் வெளியே சொல்வேன? இப்போ கூட உங்ககிட்ட இதை ரகசியமா காப்பாத்துவீங்க என்கிற நம்பிக்கையில் தான் பேசறேன்.''

''கதையா எழுதினக் கூடப் பெயரை மாற்றிடுவேன் இல்லையா? அதனல் கவலைப்பட வேண்டாம் நீங்க'' என்ருர் பத்மநாபன்.

''கிடக்கு, மேலே சொல்லுங்கோ'' என்று பொறுமை இழந்து துரிதப் படுத்தினள் அம்புஜம்.

''அவனை நான் அடிச்சதை வனஜாவினல் தாங்கிக்க முடியலே. 'நான் நிசத்தைச் சொல்லிடறேன். அவரை விட்டுடுங்க' என்ருள். அவள் உண்மை என்று சத்தியம் செய்து கூறியது மருதாசலத்தின் கதையை விட விநோதமாய் இருந்தது'' என்ருர் நடராஜன்.

**வ**னஜா சொன்னது:

நான் நடத்தை கெட்டவள்தான்; அதை இனிமே உங்ககிட்டே ஒளிச்சு மறைச்சு ஆகப்போறது ஒண்ணுமில்லே. கணவனைக் கொன்ற பழி என்னைச் சூழாமல் இருந்தால் போதும். ஒருவனுக்கு ஒருத்தி அல்லது ஒருத்திக்கு ஒருவன் என்கிறது என்னைப் பொறுத்தவரையில் சரிப்பட்டு வராது என்பதை எங்கள் கல்யாணத்துக்குப் பிறகுதான் என் கணவர் புரிஞ்சுக்கிட்டார். அதனலே மனசு ஒடிஞ்சு போய் அடிக்கடி 'தற்கொலை செய்துக்கப் போறேன்; செத்துப் போயிடப் போறேன்' என்றெல்லாம் பேசுவார். நானும் திமிராகவே பதில் சொல்லியிருக்கேன். ''செய்யுங்க, ஆனல் அப்படிச் செய்யும்போது ஒரு கடிதாசு எழுதிப் பாக்கெட்டில் வைச்சுக்கிடுங்க. இல்லாதபோனல் கொலை நடந்ததாக யாருக்காவது சந்தேகம் ஏற்படப் போகுது!'' இப்படி நிர்த்தாட்சண்யமாக நான் பதில் சொல்லியிருக்கேன். அன்று நான் இவரை (மருதாசலத்தை) வீட்டுக்கு அழைத்து வந்து உபசரித்தது அவருக்குப் பிடிக்கலே. வீட்டை வெறுத்துக் கிளம்பியவர் சாந்தி தேடிக் கொடைக்கானல் வந்திருக்கிருர்; தற்கொலை முனையைப் பார்த்திருக்கிருர். ஏற்கனவே அடிக்கடி எழுகிற தற்கொலை எண்ணம் ஸூயிஸைட் பாயிண்டைப் பார்த்ததும் உறுதிப் பட்டிருக்கிறது. ஹில்டாப் ரோட்டில் ஏறி வந்து உயிரை விட யோசித்திருக்கிருர். அதே சமயம் நாங்கள் இருவரும் மேலேறி வந்திருக்கிறோம். மறைந்திருந்து பார்த்திருக்கிருர். நாங்கள் நெருங்கி உறவாடி அன்யோன்யமாகப் பேசிக்கொள்வதைக் கண்டதும் இனித் தாமதிக்கலே கூடாதென்று பள்ளத்தாக்கில் பாய்ந்துவிட்டார். அவர் பாக்கெட்டைச் சோதித்தபோது தற்கொலை செய்து கொள்வதாகக் கடிதம் ஏதாவது அகப்பட்டிருக்குமே!

''இப்படி ஒரு கேள்வி கேட்டுவிட்டுத்தான் நிறுத்தினள் வனஜா'' என்ருர் நடராஜன்.

பத்மநாபனும் அம்புஜமும் ஏககாலத்தில், '' அழகுதான் '' என்றனர். ''கதைகள் ஒன்றையொன்று தூக்கியடிப்பனவாக அல்லவா இருக்கின்றன?'' என்ருர் பத்மநாபன்.

''நானும் இந்தக் கூற்றை ஒப்புக் கொள்ளவில்லை. 'கப்ஸா அடிக்காதே! தற்கொலைக் கடிதாசு எதுவும் அவன் பாக்கெட்டில் இல்லை. அப்படியே தற்கொலை செய்துக்கிடணும்னலும் அவன் வீட்டிலேயே உத்தரத்தில் தொங்கலாமே; இதற்காகக் கொடைக்கானலுக்கு வரணுமா என்ன?' என்றேன்.

''அப்போ வனஜா அழுது புலம்பி என் காலைப் பிடிக்கக்கிட்டா. 'இது

# நீங்கள் தயார் செய்வது எதுவானாலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை மேலும் சீராகத் தயார் செய்ய உதவுகிறது.



நீங்கள் கைதேர்ந்த தொழிலாளியாக இல்லாவிடினும் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் உங்களுக்கு நுட்பமான வேலையில் உதவுகிறது.



தையற்காரர்கள் மிக அழகிய நாகரீக உடைகள் தயார் செய்ய பிலிப்ஸ் உதவுகிறது.



உங்கள் தொழிற்கூடத்தில், பிலிப்ஸ் உற்பத்தியைப் பெருக்க உதவுகிறது.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் 100 வாட் பல்பினைப் போல் இரு மடங்கு ஒளி தருகிறது. சிறந்த, பிரகாசமான, கண்கூசவில்லாத ஒளி உங்கள் பார்வையைப் பெரிதும் சீராக்குகிறது. இருந்தும், மின்சாரச் செலவு ஒரு 40 வாட் பல்புக்காகும் அளவேதான்.

இக்கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் இணைப்பு ஒரு பிலிப்ஸ் 40 வாட் ஃப்ளூரசெண்ட் பல்ப் கொண்டது. அது சிறந்த, அதிகப்பிரகாசமான ஒளியைத் தருகிறது. பலாஸ்ட், ஸ்டார்ட்டர், ஸ்டார்ட்டர் ஹோல்டர், மற்றும் லாம்ப் ஹோல்டர் கொண்டது. இந்த பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட், பொருத்துவதற்கு எளிதானது. உபயோகத்திற்கு சிக்கனமானது. உங்கள் தயாரிப்புகளை மேலும் சீராக்க அது பெரிதும் உதவுகிறது.

இன்றே பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்துங்கள்—உங்கள் தொழிற்கூடம், மற்றும் வீட்டில்.



## பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்

மூலம் அரைப்பங்கு
செலவில் இருபங்கு
வெளிச்சம்
பெறுங்கள்.

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL 3560(A)

தான் உண்மை; நம்புங்க. அவர் தற்கொலைதான் செய்துக்கிட்டார், ஆனால் எங்க பேரிலே கொலைக் குற்றம் விழணும் என்பதற்காகவே கடிதாக ஒண்ணும் எழுதி வைக்காமல் இருந்ததோடு எங்க எதிரிலேயே பள்ளத்தாக்கில் பாய்ந்து பழி தீர்த்துக்கிட்டிருக்கிறார். எங்களை விட்டுடுங்க. நாங்க கொலை பண்ணலை' என்று கண்ணீர் பெருக்கிக் கூறினாள்.''

''கடைசியிலே நீங்க என்ன பண்ணினேன்?'' — அம்புஜம் முடிவைத் தெரிந்து கொள்ளும் ஆவலுடன் வினவினாள்.

''தினகரனைப் பள்ளத்தாக்கில் தள்ளி மருதாசலம் கொலை செய்ததாகவும் அதற்கு வனஜா உடந்தையாக இருந்ததாகவும் கேஸ் போட்டிருக்கேன். கொலை செய்ய வேண்டும் என்று முன் கூட்டியே இவங்க திட்டம் போடலைன்னாலும் அந்தச் சந்தர்ப்பத்தில் வாக்கு வாதம் முற்றியது என்பதும் இவர்களது தகாத காதலுக்கு இடையூறாக இருந்த தினகரனைத் தீர்த்துக் கட்ட நினைத்துக் கணப்போதில் உணர்ச்சி வசப்பட்டு மருதாசலம் செயல்பட்டு விட்டான் என்பதும் போலீஸ் தரப்பு கேஸ்.''

நடராஜன் இவ்வாறு கூறியதும், ''நான் கேட்கிறேன் என்று தப்பா நினைக்காதீங்க'' என்று முஸ்தீப்புடன் அம்புஜம் ஒரு கேள்வியைப் போட்டாள்: ''ஒருவேளை அவங்க சொன்னதே நிஜமாக இருந்து விட்டால்?''

''எது நிஜம்? மூன்று விதமாகப் பேசியிருக்காங்க. வாழைப் பழத் தோல் என்பது முதல் விளக்கம். தற்கொலை — பாக்கெட்டில் கடிதாக இருக்கும் என்பது இரண்டாவது விளக்கம். இவர்கள் மீது கொலைக் குற்றம் சுமத்தப்பட வேண்டும் என்பதற்காகவே பள்ளத்தாக்கில் பாய்ந்து பழிவாங்கிவிட்டான் என்பது மூன்றாவது விளக்கம். எது உண்மை?''

''இரண்டாவது விளக்கத்தை விட்டு விடலாம். தற்கொலைக் கடிதம் ஏதும் அவன் பாக்கெட்டில் இருக்கவில்லை என்பது நமக்குத் தெரியும். முதல் அல்லது மூன்றாவது விளக்கத்தில் உண்மை இருக்குமானால்?'' என்று பத்மநாபன் ஐயம் எழுப்பினார்.

''அதைக் கோர்ட்டார் தீர்மானித்து விடுதலை தரட்டுமே? வேண்டாம் என்கிறேனா நான்? விடுதலை பெற்றாலும் இந்த வழக்கு ஓர் அதிர்ச்சி வைத்தியமாகப் பயன்பட்டு எதிர்காலத்தில் அவர்கள் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வைக்கும்.''

''ஒருவேளை அவர்கள் விளக்கம் உண்மையாக இருந்து, தீர்ப்பு போலீஸ் தரப்புக்குச் சாதகமாக இருந்துவிட்டால்? அநியாயமாக இருவருக்குத் தண்டனை கொடுத்ததாகாதா?'' — இது அம்புஜம்.

''அநியாயம் என்னம்மா இதில்? அதிகபட்சம் ஆயுள் தண்டனை கிடைக்கப் போகிறது. ஆனால் மருதாசலமும் வனஜாவும் பண்ணியிருக்கிற அக்கிரமத்துக்கு அடுத்த ஜன்மத்துக்கும் சேர்த்து அவர்களுக்கு இரட்டை ஆயுள் தண்டனை விதிக்கலாம்!'' என்றார் நடராஜன்.

''அது என்னவோ உண்மைதான்'' என்று கூறிக் கொண்டே எழுந்தார் பத்மநாபன். ''பஸ் புறப்படும் நேரமாகிவிட்டது; கிளம்புங்கள்'' என்றார்.



## 37. 'இன்றிரவு...!'

பெரியவர்கள் கொலையா, தற்கொலையா என்ற விவாதத்தில் ஈடுபட்டிருந்தபோது மீனுவும் ரங்கனும் குழந்தைகள் அனுவையும் விசுவையும் கவனித்துக் கொள்கிற சாக்கில் மெல்ல நழுவியிருந்தனர்.

சற்று அப்பால் போனதும் மீனுவின் கண்களிலிருந்து அடக்க மாட்டாமல், தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தது. அதைப் பெற்றவர்கள் பார்த்து விடப் போகிறார்களே என்ற பயத்தில் அவள் அவர்களுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். ரங்கன் இரு கைகளையும் நீட்டி அவள் முகவாயை ஏந்த வேண்டும்; கண்ணீரைத் துடைக்க வேண்டும் என்று துடியாக இருந்தான். ஆனால் அவனும் தகப்பனுருக்குப் பயந்து தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டான். இருவருமே பெற்றோரிடம் மிகுந்த மதிப்

பும் மரியாதையும் வைத்திருந்ததால் அவர்களுக்குப் பிடிக்குமோ பிடிக்காதோ என்ற தயக்கம் சதா உடனிருந்தது. சகஜமாகப் பழகிய போதிலும் அடக்கத்தையும் அனுசரித்தனர்.

'' 'சொல்கிறேன், கேட்கிறேன்' என்று நாட்களைக் கடத்தி விட்டீர்கள். நாளை நாங்கள் சென்னை திரும்புகிறோம். பிறகு உங்களை எங்கே, எப்போது சந்திக்கப் போகிறேன்?'' என்றாள் மீனு.

'' என்னவோ சந்திர மண்டலத்துக்கே போய்விடப் போகிறவள் மாதிரி பேசறயே? அங்கே போனாலும் பூவுலகுடன் விநாடிக்கு விநாடி தொடர்பு வைத்துக் கொள்ள முடிகிற காலம் இது. எதுக்கு அனாவசியக் கவலை? கல்யாணம் முடிந்த கையோடு ஹனிமூனுக்கு நாம் கொடைக்கானலுக்கே வரப் போகிறோம், பார்!''

வெட்கத்தில் கன்றிச் சிவந்த கன்னங்கள் அவன் சுவைத்துத் தின்ற ப்ளம் பழங்களை நினைவூட்டின. எரித்தண்ணீரை இடக் கரத்தால் சிறிதளவு அள்ளி வீசினாள் அவள், பொய்க் கோபத்தோடு. புன்னகை மலர்ந்தது; கண்ணீரும் அதிகரித்தது!

''என்னிடம் பேசறதிலே ஒண்ணும் குறைச்சல் இல்லே! உங்க அப்பாவிடம் சொல்லணும் என்கிறபோது மட்டும் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக்கொள்ற தாக்கும்! கூடவே, 'பெற்றவர்களுக்குத் தெரியாமல் நாம் ஆசைகளை வளர்த்துக்கிடறதும் கோட்டைகள் கட்டறதும் தப்புன்னும் நீங்களே சொல்றேள். இப்படி நீங்க சொல்றதைக் கேட்கும்போதெல்லாம் எனக்குப் 'பகீ' ரென்றிருக்கிறது.''

''ஒரு பயமும் வேண்டாம் மீனு! என் அப்பா மறுத்துச் சொல்லவே மாட்டார். ஆட்சேபிக்க என்ன இருக்கிறது? ஜாதி என்கிற ஒரு சொல்லை மறந்து விட்டால் நம் கல்யாணம் நடந்தேறத் தடை என்ன?''

''நாம் மறந்து விடலாம்; ஆனால் மறக்க வேண்டியவர்கள் மறக்கணுமே!''

''ஒருவேளை உன் பெற்றோர்கள் தயங்கினாலும் அவர்களை வழிக்குக் கொண்டு வரும் பொறுப்பை என் அப்பாவே ஏற்றுக்கொள்வார் பார்! உன்னை மருமகளாக அடையக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே அவருக்கு! கடைசிவரை வாதாடிப் பார்க்காமல் விட மாட்டார்!''

''இதெல்லாம் நீங்கள் ஊகமாகச் சொல்வதுதானே? அவருக்கு இன்னும் விஷயமே தெரியாதே?''

''எதற்கும் சமயம் வரணும், மீனு! பக்குவமாகப் பேசணும்.''

''அந்த வேளை எப்போ வரும்?''

'' நேரம் நெருங்கிக்கிட்டுத்தான் இருக்கு. இங்கு நடந்த மூன்று கொலைகளும் ஸைக்கோ ஸாரநாதன் செய்தவை என்ற வதந்தி பரவலாகப் பரவியிருந்தது. இப்போ அதற்கு முடிவு கட்டிவிட்டார். ஐ. ஜி. இவரை ஃபோனில் பாராட்டி, 'இதுவரை கொடைக்கானவில் 'டியூட்டி'யில் இருந்ததாக நினைச்சுக்கிடுங்க. ஒரு வாரம் பத்து நாள் ஓய்வாக இருந்துவிட்டு வாங்க'ன்னு சொல்லி இருக்கார். இல்லேன்னா நாங்களும் நாளைக்குக் கிளம்பியிருக்க வேண்டியது தான். இனி அவர் மன நிம்மதியோடு இருப்பார் என்பதால் நான் துணிந்து நம் விஷயத்தைப் பற்றி அவரிடம் பேசலாம்.''

''அப்படியானால் இன்றைக்கு ராத்திரி அவரிடம் பேசி விடுங்கள்; நாளை நாங்கள் புறப்படு முன் அவர் மனசை அறிந்து எனக்குத் தகவல் சொல்லுங்கள். அப்பா அம்மாவிடம் அப்புறமாகப் பேசிக் கொள்ளலாமென்றாலும் உங்க அப்பாவின் ஆதரவு நமக்கு உண்டு என்ற அளவுக்காவது தெம்பு பெற்றுச் சென்னை செல்கிறேன் நான்!''

'' உன் கோரிக்கை நியாயமானது தான் மீனு! ஆனால் அதில் ஒரு சங்கடம் இருக்கு'' என்றான் ரங்கன்.

''என்ன அது? சொல்லுங்கள்!''

''அதைச் சொல்ல எனக்கு உரிமை இல்லே மீனு. ரகசியம்!''

சரேலென்று மீனுவின் முகம் வெளுத்தது. ''சரி, நான் போகிறேன்; அம்மா ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறாள்'' என்று எழுந்தாள்.

பெற்றவர்கள் பார்த்து விடுவார்களோ என்ற எண்ணம் சிறிதும் இன்றி விருட்டென்று அவள் கரத்தைப் பற்றி விட்டான் ரங்கன். தானியங்கு முறையில் செயல்பட்டு விட்டது அவன் கை. அவள் மீண்டும் உட்கார்ந்த மறுவினாடி தவற்றை உணர்ந்தது போல் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான்—புத்தம் புதிய ரோஜாப் பூமாலையை வருடிய சுகானுபவத்துடன்தான்!

''மீனு! நீ என்னை நம்பவில்லை என்று தோன்றுகிறது!''

''தவறு! நீங்கள்தான் என்னை நம்பவில்லே. அதனால்தானே காரணத்தைக் கூற யோசிக்கிறீர்கள்?''

''நம்புகிறேன் மீனு! நம்பிச் சொல்கிறேன். ஆனால் தயவுசெய்து இந்த ரகசியத்தை வேறு யாரிடமும் வெளியிட்டு விடாதே! அப்புறம் என் அப்பாவுக்கு என்னிடம் உள்ள மதிப்பு தவிடு பொடியாகி விடும்'' என்ற ரங்கன் தொடர்ந்தான்:

''இங்கு நேர்ந்த மூன்று துர்மரணங்களுக்கும் ஸைக்கோ ஸாரநாதன் பொறுப்பல்ல என்று என் அப்பா நிச்சயமாக நம்பினாலும் ஸைக்கோ ஸாரநாதன் கொடைக்கானலுக்கு வந்திருப்பதாகவே கருதுகிறார். அவனை இன்றிரவு கையும் களவுமாகப் பிடிக்கத் திட்டம் போட்டிருக்கிறார். அதனால் தான் சொன்னேன், நம் விஷயத்தை அவரிடம் இன்றிரவு கூற முடியாதென்று. இன்றிரவு அவர் விரிக்கும் வலையில் அவன் சிக்கி விட்டால், பிறகு நானே சாவகாசமாக, அமைதியாக அவரிடம் பேசுவேன்.''

''ரங்கன்! ஸைக்கோவைப் பிடிக்கும் இந்தத் திட்டத்தில் உங்களுக்கும் பங்கு உண்டா?'' என்று பரபரப்புடன் கேட்டாள் மீனு.

''அப்பாவுக்கு உதவுவேன் மீனு!''

''ரங்கன்! ஜாக்கிரதையாக இருங்கள் ரங்கன்! ப்ளீஸ்! ப்ளீஸ்!'' என்றாள் மீனு நாத் தழுதழுக்க. (தொடரும்)

# வட்டமேஜை

சில பத்திரிகை எங்கள் தி. மு. கழகத்தின் கொள்கைக்கு மாறுபட்டு இருந்தாலும் அது தரமுள்ள உயர்ந்த பத்திரிகை என்று மதித்து வருபவன் நான். தங்கள் 3–9–72 இதழில் 'போக்குவரத்துப் போலீசும், எம்.எல்.ஏ.'யும் என்ற தலைப்பில் 'தீரன்' எழுதியிருந்தது, நான் தொடர்புடையது என்பதால் இதை எழுதுகின்றேன்.

22–8–72ந் தேதி காலை கோயமுத்தூரிலிருந்து கொச்சின் எக்ஸ்பிரஸ்மூலம் சென்னை வந்து இறங்கினேன். ஸ்டேசனுக்கு வெளியே வந்தபோது என்னுடைய கார் டிரைவர் ஸ்டேசனுக்கு முன்னால் காரைக் கொண்டு வந்து நிறுத்த நான் காரில் ஏறினேன். உடனே ஒரு போலீஸ் சார்ஜண்ட் வந்து, இந்த இடத்தில் 'உங்களை யார் காரில் ஏறச் சொன்னது?' என்று கேட்டார். இறங்கும் போது 'இந்த இடத்தில்தான் காரை நிறுத்தி இறங்குகிறோம். அதனால் ஏறினேன்' என்றேன். 'இல்லை, இங்கு ஏறியது தப்பு' என்று சொன்னார். 'சரி, சட்டப்படி சார்ஜ் செய்து கொள்ளும்' என்று கூறினேன். 'காருக்குள் உட்கார்ந்து கொண்டு பேசிக்கொண்டிருக்கிறாய். கீழே இறங்கி வந்து இந்தப் பாரத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டு என் பின்னால் வா' என்று சொல்ல, 'வேண்டுமானால் கையெழுத்துப் போடுகிறேன். உன் பின்னால் எதற்கு வருவது' என்று கூறினேன். 'அப்படியானால் காரை எடுக்க விடமாட்டேன்' என்று சொல்லி அவமரியாதையாகப் பேசியதோடு அரை மணி நேரம் காரை எடுக்க விடாமல் தடுத்து நிறுத்திவிட்டார். இவ்வாறு அன்று நடைபெற இருந்த சட்டசபைக் கூட்டத்திற்குப் போவது தடுக்கப்பட்டதால் வேறு வழியின்றி மேலதிகாரிகளுக்குப் போன் பண்ணி அவர்கள் வந்து விடுவித்தார்கள். இதுதான் உண்மையில் நடந்தது.

சென்னை-18 கோவை செழியன்
1-9-72 எம். எல். ஏ

நான் 1963ம் ஆண்டில் எனது 27வது வயதில் கோவைக்கு அருகில் ஒரு குக்கிராமத்தில் சர்வதேசக் கல்வி நிலையம் என்ற பெயரில் ஓர் உயர்நிலைப் பள்ளியைத் தொடங்கி நடத்தி வந்தேன். அப்பள்ளியை நிர்மாணிக்க எனது முழு நேர உழைப்பையும், எனது சொத்துக்களையும் ஈடுபடுத்தினேன். பள்ளியில் வெளிநாட்டு ஆசிரியர்கள் சிலர் வேலை செய்தனர். பள்ளியின் லட்சியங்கள், செயல் முறைகள் பற்றி அறிந்து பாராட்டிய வெளிநாட்டு அறிஞர்கள் பலர். அதனால் ஐரோப்பாவுக்குச் சென்று சர்வதேச அடிப்படையில் கல்வி அளிப்பது குறித்துப் பல நாடுகளில் பேசவும், அங்கு பள்ளிகளைப் பார்க்கவும் எனக்கும் எனது மனைவிக்கும் அழைப்புக்கள் இலவசமாக வந்தன.

இத்தனை சிறப்புக்களைப் பெற்றிருந்த ஓர் ஏழைப் பள்ளிக்கூடம் இன்று அரசாங்கத்தின் நிர்ப்பந்தத்தால் மூடப்பட்டுள்ளது. 329 ஏழைப் பிள்ளைகளைக் கொண்ட இப்பள்ளிக்குப் போட்டியாக அதே கிராமத்தில் ஓர் அரசுப் பள்ளி தொடங்கப்பட்டுள்ளது. இது கூட அசாதாரண நிகழ்ச்சி அல்ல.

எனது பள்ளியிலிருந்து கல்வி அதிகாரியின் உத்தரவின் பேரில் முக்கிய தஸ்தாவேஜுகள் நிர்வாகத்தினருக்குக்கூடத் தெரியாது கடத்தப்பட்டன. பெற்றோர்கள், மாணவர்கள் கையெழுத்திட்டுத் தனியார் பள்ளியில் பயில விருப்பம் தெரிவித்தும் பெற்றோர் விருப்பத்தையும் உதாசீனம் செய்து, அவர்கள் விண்ணப்பம் செய்யும் கேட்காமல் கல்வி அதிகாரியே மொத்தமாக எல்லா மாணவர்களின் மாற்றுச் சான்றிதழ்களையும் அரசாங்கப் பள்ளிக்கு மாற்றிவிட்டார்! இது கல்வி விதிகளுக்கு நேர் முரணானது. தனியார் நிர்வாகம் தேர்ந்தெடுத்து நியமனம் செய்துள்ள ஆசிரியர்களை அரசாங்கம் அரசாங்க உயர்நிலைப் பள்ளிக்கு மாற்றம் செய்துள்ளது! இதுவும் கல்வி விதிகளுக்கும், அடிப்படை நியதிகளுக்கும் முரணான செயலே.

வேண்டுமென்றே ஆசிரியர்களுக்குச் சில மாதங்களாகச் சம்பளம்வழங்கவில்லை. பின்பு, கல்வி அதிகாரியேநேராகச் சம்பளம் வழங்கியதாகக் கேள்வி! இதுவும் ஒரு முன்னேற்றம்.

எதிர்க்கட்சி வரிசையில் இருந்து நான் அரசாங்கத்தை விமர்சனம் செய்யும் ஒரே 'பாவத்துக்காக' அரசாங்கம் இத்தனை 'பாதகங்களையும் செய்யத் துணிந்துள்ளது என்றால் இதனைப் பாசிச அரசு என்று வர்ணிப்பதைத் தவிர வேறு மொழி தெரியவில்லை. தமிழ் மக்களின் வாழ்வு கடவுள் கையில்தான் உள்ளது போலும்!

கோவை வ. ஈசுவரமூர்த்தி
24–8–72 எம்.எல்.சி.

# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை




வியர்வை துர்நாற்றத்திலிருந்தும், அதனல் நுண்ணிய கிருமிகளிட மிருந்தும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஏற்படும் சங்கடத்தி லிருந்தும் பாதுகாப் பளிக்கிறது.
ஜி-11 கலந்து **சிந்தால் டாய்லெட் பவுடர்** இந்தப் பாதுகாப்பைத் தருகிறது. அதோடு...அன்றலர்ந்த மலரின் நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்** துர்நாற்றத்தை அறவே போக்கிப் பாதுகாப்பளிக்கும் டாய்லெட் பவுடர்.

Interpub/GSP-6/72R Tam

# சரிந்தது கூரை..!



கிண்டி பொறியியற் கல்லூரி சுற்றுச் சுவருக்குள் நவீன பாணி கூரை (Parabolic roofing) யுடன் முடியுந் தறுவாயில் இருந்த கட்டடம் செப்டம்பர் முதல் தேதி இடிந்து விழுந்து லயமாகிக் கிடக்கும் காட்சியைக் காணப் பொறியியல் வல்லுநர்களும் கட்டடக் கண்டிராக்டர்களும், பொது மக்களும் ஏராளமாக வந்த வண்ணம் இருக்கின்றனர்.

''இந்தப் புதிய முறைக் கட்டட அமைப்பில் என்ன விசேஷம்?'' அருகில் நின்ற பொறியியல் நிபுணரிடம் கேட்கிறேன்.

அவர் சந்தேகத்துடன் என்னைப் பார்த்து விட்டு, ''பாரபோலிக் அல்லது ஷெல் வடிவக் கூரை அமைப்பில் கட்டடத்துக்குள் தூண்கள் இராது. ஒரு கொட்டாங்கச்சி அல்லது கிளிஞ்சலைக் கவிழ்த்து வைத்தது போன்றிருக்கும். அமெரிக்காவில் இப்போதெல்லாம் இதுபோன்ற கட்டடங்கள் பல உருவாகி வருகின்றன'' என்கிறார்.

'' தூண்களே இல்லையென்றால் இந்தக் கனமான காங்க்ரீட் கூரைக்கு என்ன ஆதாரம்?'' என்று கேட்கிறேன்.

''இதோ வெளிப்புறமுள்ள இந்த ஆர். சி. சி. (காங்க்ரீட்) தூணுடன் இணைந்த உத்தரம் (Beam) இருக்கிறதல்லவா? இம்மாதிரி மூன்று பக்கங்களிலும் மூன்று உள்ளன. காண்டிலிவர் முறையில் அமைந்த இந்த அஸ்திவாரத் தூண்கள் பூமிக்கடியில் நன்கு நங்கூரம் பாய்ச்சப்பட்டிருக்கும். (Cantilever beam anchored at the bottom.) இம்மூன்றும்தான் காங்க்ரீட் கூரைக்கு ஆதாரம்'' என்று விளக்குகிறார்.

சாரம் (Scaffolding) கட்டுவதற்காக உபயோகிக்கப்பட்ட கப்பாணிக் கயிறு ஒரு துண்டு கீழே கிடக்கிறது கண்ணில் படுகிறது. அதை எடுத்துத் தூணின் அடிப் பாகத்தை அளந்து பார்க்கிறேன். 40 அங்குல அகலமுள்ள தூண். அதே கயிற்றினால் காங்க்ரீட் கூரையின் கனத்தையும் அளக்கிறேன். விளிம்பின் அருகில் மூன்றங்குல கனம். காங்க்ரீட் கூரை எஃகுக் கம்பிகளால் (Ribbed Steel wire) குறுக்கும் நெடுக்குமாகச் சதுரம் சதுரமாக இறுகப் பிணைக்கப்பட்டு எஃகுக் கம்பிகளால் பந்தல் போட்டமாதிரி காட்சி அளிக்கிறது.

''இந்தியாவில் இந்த மாதிரிக் கட்டிட அமைப்பு வேறு எங்கெல்லாம் இருக்கிறது?'' என்று விசாரித்ததில் ஐ. ஐ. டி. (சென்னை)யிலும் சண்டிகரிலும் வேறு சில இடங்களிலும் கூட உள்ளன என்று தெரிய வருகிறது.

மேலே : கிண்டி பொறியியல் கல்லூரியில் இடிந்து விழுந்த கட்டடம்.

கீழே : அமெரிக்காவில் இல்லினாய்ஸ் சர்வகலாசாலையில் 16,000 மாணவர் அமரக்கூடிய மாபெரும் கூடம். மூன்று ஏக்கர் பரப்பளவு உள்ள கூரையைத் தாங்கும் தூண்கள் ஏதும் உட்புறம் கிடையாது!



''இம்மாதிரிப் புதிய பாணிக் கட்டிட அமைப்பு மற்றச் சம்பிரதாயமான அமைப்புக்களைவிட எந்த விதத்தில் சிலாக்கியமானது?'' என்று பொறியியல் வல்லுநரிடம் வினவுகிறேன்.

''ஏன், பார்த்தாலே தெரியவில்லையா? இடிந்து விழுந்து நொறுங்கிக் கிடக்கிறதே? இதைவிட வேறு என்ன வேணும்?'' என்கிறார் அருகிலிருந்த வேறொருவர்.

''தகுதியுள்ள பலருக்கு, முதல் வகுப்பில் தேறினவர்களுக்கு, கணக்கிலே நூற்றுக்கு நூறு மார்க் வாங்கினவர்களுக்கெல்லாம் பொறியியல் கல்லூரியில் இடம் கிடைக்க மாட்டேன் என்கிறது. சிபாரிசு, அப்படி இப்படின்னு பொறியியல் கல்லூரியிலேயும், மருத்துவக் கல்லூரிகளிலேயும் இடம் பிடிச்சுடறாங்க. விளைவு இப்படி இருக்கு!'' என்கிறார் அருகில் நிற்கும் மற்றொருவர்.

இன்னொருவர், ''கூரை சரிவா இருக்கு. நீர் கட்ட வாகு இல்லே. 'க்யூரிங்' போதாது சார். காங்க்ரீட் கட்டடத்துக்கு க்யூரிங் சரியாகச் செய்யாத போனால் பலக் குறைவு தான்!'' என்று கூறிவிட்டுக் கீழே கிடந்த காங்க்ரீட் கட்டி ஒன்றை எடுத்துத் தரையில் அடிக்கிறார். ''பார்த்தீர்களா? எப்படிப் போர போரன்னு காரைக் கட்டி மாதிரி உதிர்ந்து போகிறது! களிமண் கட்டடம்கூட இதைவிட ஸ்ட்ராங்கா இருக்குமே!'' என்று அங்கலாய்க்கிறார்.

''அநுபவமில்லாத கன்ட்ராக்டர்களை எல்லாம் இந்த மாதிரி வேலைக்கு நியமிக்கக் கூடாது சார்! பெரிய புகழ் பெற்ற கம்பெனிகள் எத்தனையோ இருக்கே? அவர்களிடம் இந்த வேலையை ஒப்படைத்திருக்கலாமே?'' என்கிறது பிறிதொரு குரல்.

பொறியியல் நிபுணர் கூறுகிறார்: ''சம்பிரதாய முறையிலான கட்டட அமைப்பினைவிட இம்மாதிரி அமைப்புக்கு சிமெண்ட், கற்கள் முதலிய பொருட்கள் குறைவாகவே தேவைப்படும். விரைவாகவும் முடிக்கலாம். தோற்றம் (Finish) மிக அழகாக இருக்கும். ஆனால் கவனத்துடன் உருவாக்க வேண்டும்.''

வேடிக்கை பார்ப்போரின் கூட்டம் அதிகமாகி வருகிறது. வேர்க்கடலைக் கூடையுடன் ஒரு பையன் உள்ளே வருகிறான். ''வேர்க்கடலே விற்க நல்ல இடம் பார்த்தே, போ!'' என்று யாரோ ஒருவர் கடலைக்காரனை விரட்டுகிறார். நானும் கட்டடம் முழுவதும் உருப்பெற்று இங்கு ஏதாவதொரு நிபுணர் கூட்டம், மாநாடு என்று நடைபெற்றுக் கொண்டிருக்கையில் இப்படி அசம்பாவிதம் நிகழ்ந்திருந்தால் மிகப் பெரிய விபரீதமாகப் போயிருக்குமே என்று எண்ணுகிறேன். உயிர் துறந்த தொழிலாளரை நினைத்து விசனித்தபடியே வெளியேறுகிறேன்.

— 'பா'

# 'ஜே' பண்ணைக்கு ஜே!



'வசிஷ்டர் வாயால் பிரும்ம ரிஷி' பட்டம் பெற வேணும் என்று சொல்வார்கள். விவசாயத் துறையில் பசுமைப் புரட்சி கண்டு வரும் இந்திய விவசாயக் கழகத்தின் டைரக்டர் ஜெனரல் டாக்டர் எம். எஸ். சுவாமிநாதன் டாடீபே டிராக்டர் ஸ்தாபனத்தினர் நடத்தி வரும் ஜே பண்ணைக்கு விஜயம் செய்தார். புதிய நவீன விவசாய சாதனங்களைக் கைக்கொண்டு ஏடிடி 27, ஐ ஆர் 8, ஐ ஆர் 20, கருணை, கண்ணகி அரிசி ரகங்களை வளமையுடன் பயிரிடுவதைப் பாராட்டினார். அது என்ன கண்ணகி என்கிறீர்களா? இந்த அரிசி ரகம் புஸா இன்ஸ்டிட்யூட்டில் டாக்டர் சுவாமிநாதன் அவர்கள் மேற்பார்வையில் தயாரானது.

'ஜோத்பூரில் பாலைவனப் பிரச்னைகளை ஆராய்ந்து அவற்றில் பயிரிடும் வழிகளைக் காண ஓர் ஆராய்ச்சிக் கழகம் இயங்கிக் கொண்டிருக்கிறது; ஹைதராபாத்தில் சர்வதேச பாங்கியின் உதவியுடன் சர்வதேசப் பயிர்கள் ஆராய்ச்சிக் கழகம் ஏற்படப் போகிறது—இதற்கு ஆந்திர சர்க்கார் 2500 ஏக்கர் நிலம் கொடுத்திருக்கிறார்கள்' என்றெல்லாம் தகவல் தந்த திரு எம். எஸ். ஸ்வாமிநாதன், ''படித்தவர்கள் விவசாயத்தில் அதிகமாக ஈடுபட முன்வர வேண்டும்!'' என்று அபிப்பிராயப்பட்டார்.

ஜே பண்ணையில் ருமானி மாம்பழ மரங்களை ஐம்பது ஏக்கர் நிலத்தில் வளர்த்திருக்கிறார்கள். ஐந்து ஆறு வருஷங்கள் வரை காய் விழாமல் பூக்களைக் கொய்து விடுகிறார்கள். ஆறு வருஷங்களுக்குப் பிறகு இந்த ருமானி மாமரங்கள் கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்குமாம்! நடுவிலே நாலைந்து வருஷங்கள் இந்த மாமரத் தோட்டங்களில் நிலக் கடலையைப் பயிரிட்டு மகசூல் பெறலாம். அதோடு அறுவடை செய்ததும் நிலக்கடலை செடிகளை உழுதுவிட்டால் உரமாகி மாமரம் செழிக்கவும், மண் சரியாமல் பாதுகாக்கவும் உதவுகிறது. ஒரு கல்லில் இரண்டு மாங்காய் கதைதான்!

-- பி.எஸ்.எம்.



# வழிபாடுகள் மாறியபின்

## வையவன்

கீர்த்தி வந்து கொண்டிருந்தாள். எல்லாம் பழசாகி விட்டது. கொஞ்சமாகக் கொண்டாடிய உணர்வுகளை அநுபவம் விளையாட்டுப் பொம்மைகளைப் போல் விட்டெறிந்து விட்டது. முதிர்ச்சியின் முரடுகளில் சின்னச் சின்ன சந்தோஷங்கள். சிறு சிறு சலனங்கள் நிறுவிய அமர நிலைகள் அர்த்தமிழந்து விட்டன.

ஆயினும் கடந்த காலத்தின் நினைவுகளுக்கெல்லாம் பாத்திரமானவளாய்க் கீர்த்தி என் எதிரே நடந்து வந்து கொண்டிருந்தாள். ஒரு சக்கர நாற்காலியில் காஷ்மீர் சால்வையைப் போர்த்திக் கொண்டு டாக்டர் கிருஷ்ணையாவின் முதல் மனைவி. வெள்ளை சாக்லைம் கழுத்தில் டையுமாக கட்டித் தோட்டத்தில் பெரிசாய்ப் பூத்த புஷ்பங்கள் போன்று... ஒன்று இரண்டு... ஐந்து குழந்தைகள்.

டாக்டரின் அத்தை, அண்ணு, தம்பிகள் அவர்களின் மனைவியர். வாக்கிங் ஸ்டிக்கும் தலையில் மப்ளருமாக டாக்டரின் அப்பா. குடும்பத்தோடு எங்கோ பிரயாணம் போகிறது. பெரிய குடும்பம்தானு? என்னினேன். பதினேழு. டாக்டரையும் கீர்த்தியையும் சேர்த்தால் பத்தொன்பது. டாக்டர் வருமானம்தான் அச்சு மையம்.

கீர்த்தி என்னைப் பார்த்து விட்டாள். நான் கண்களைத் திருப்பிக் கொண்டேன். இடைரென்று எனக்கு ஆத்திரம் வந்தது.

'சீ, இவளும் ஒரு பெண்ணு? இவ்வளவு பெரிய குடும்பத்தில் புல்லுருவி மாதிரி படர்கிறோமே, வேறொருத்தியின் கூட்டைக் களவாடுகிறோமே என்று இவளுக்குத் தோன்றி யிருக்க வேண்டாம்?'

மர மல்லிகைப் பூக்கள் உதிர்ந்து இறைந்திருக்கும் இதே ரயில்வே ஸ்டேஷன் சிமெண்ட் பெஞ்சின் மீது அமர்ந்து எங்கள் நண்பர்களும் நானும் கீர்த்தியைப் பற்றி என்னவெல்லாம் பேசியிருக்கிறோம்! மேற்கில் மெதுவே அமிழ்ந்து கொண்டிருக்கும் சூரியனும், இருளின் சிற்றலைகள் கண் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மெல்லிய ரகசியம் போன்று, கவிய வருவதும்... அந்த நாட்கள் என் நினைவின் ஆழத்தில் விழுந்து போன விக்கிரகங்களாய் வெளியே வந்தன.

கீர்த்தி எனக்கு ஒரு கெஜ தூரத்தில் நின்று கொண்டிருந்தாள்.

''ஆன்ட்டீ எனக்குச் சாக்லேட்''

''ஜங்ஷன்லே வாங்கித் தரேன் பாச்சா.''

''கீர்த்தி! டிபன்பாக்ஸைச் சரியா மாட்டிக் கொக்கி போட்டியா?''

''நானே பூட்டினேன், அக்கா!''

''கீர்த்திம்மா... என் பெட்டியிலே ஜப மாலையை வச்சிருக்கயா?''

''இருக்கு மாமி.''

''பொன்னம்மாவைத் தினம் வந்து என் ஸ்டடி ரூமைப் பெருக்கி வைக்கச் சொல்லணும்னு நெனச்சிருந்தேன். கடைசி நேரத்திலே மறந்துட்டேம்மா கீர்த்தி.''

''கம்பவுண்டர் சோமுகிட்டே கவனப் படுத்தச் சொல்லி வந்தேன் மாமா.''

''பேஷ்.''

கீர்த்தி கேள்விகளுக்கு இலக்காகிக்கொண்டிருந்தாள். ஒரு விநாடியாவது அவளது கண்கள் என்னைப் பார்த்திருக்கும். எனக்கு நிச்சயமாகத் தெரியும்.

கீர்த்தியை அந்தப் பள்ளிப் பருவத்தில் ஒரு தேவதையைப் போல் ஆராதித்தோம். நாங்கள் ஐந்து பேர். அவளது உபாசகர்கள். அவளது நடையின் நேர்த்தியோடு நெளியும் நீலச் சிற்றுடை. பின்னல் ஒசிந்து ஒசிந்து ஆட, இதழ்கள் சற்றே நெகிழ்ந்து, அந்தச் சாலையின் ஜீவனைப் பிரகாசப்படுத்தியவாறு அவள் பள்ளிக்கு வரும் அந்த நாட்கள் என் நினைவின் அரங்கில் மீண்டும் நடந்தன.

எங்களில் யாருக்குமே அந்த உணர்வு என்னவென்று தெரியாது. அது காதல் அல்ல. சகோதர பாசம் என்று பொய் சொல்ல வரவில்லை. அது வேறு. எங்கள் வயதுப் பிள்ளைகள் கேலி செய்வார்கள். கீழ்த்தரமாகப் பேசுவார்கள். அசடுகள் என்று கழித்துக் கட்டுவார்கள்.

ஆயினும் கீர்த்தியின் சௌந்தர்யம்—சின்னச் சின்னச் சொற்களில் நாணமும் கம்பீரமும் நேர்மையும் தோய அவள் எங்களோடு வார்த்தையாடியது — அவள் எங்கள் தேவதையாக இருந்தாள். எங்கள் படிப்பில், நடவடிக்கைகளில் ஏன், எங்கள் ரசனைகளில் கூட நேரடியாக எவ்விதத்திலும் சம்பந்தப்படாத அவளது செல்வாக்கு இருந்தது.

நாங்கள் ஆபாசங்களில், இளமையின் முதல் முறுக்குத் தோற்றுவிக்கும் மன விகாரங்களிலிருந்து ஒதுங்கிப் போனோம். கீர்த்தியின் கபடமற்ற கருவிழிகளில் வீசிய காந்த ஒளியில் எங்கள் மன மாசுகள் எரிந்து போயிருந்தன. இது உண்மை.

இது கீர்த்திக்குத் தெரிந்தால்? அவள் இப்போது எதிரிலிருந்தால்? எங்களில் ஒருவன் இப்படியா என்று அவள் எண்ணிவிட்டால்? இவ்விதமெல்லாம் நாங்களே ஒரு வேலி வகுத்தோம்.

அவளது இதயம் மாணிக்கச் சுடர் வீசும் மணி மண்டபம் என்பது போல் எங்களுக்கு ஒரு கவியின் அபிப்பிராயம். இப்போது வாழ்க்கையின் சேறு என்னை மிதிக்கிறது. நான் அதை மிதிக்கிறேன். அந்த நினைவுகளை ஏளனப் புன்னகையோடு கவனிக்கிறேன்.

கறைபடாத மொட்டுக்கள் போன்ற அந்தப் பருவத்தில் கனவுகளும் பாரதியும் பிரபந்தமும் கட்டிய லட்சிய உப்பரிகையில்

நாங்கள் உலவினோம். சொற்கள் ஆடம்பரமாகி அந்த நிஜ நிலை புன்மையாய் விடுமோ என்று அஞ்சுகிறேன்.

கீர்த்தியின் வழிபாட்டிலிருந்த எங்களில் யாருக்காவது அவள் வாழ்க்கைப்பட்டிருந்தால் எவருமே பொருமையுற்றிருக்க மாட்டோம். ஆனால் அந்த அதிர்ஷ்டசாலிக்கே அந்த ஐசுவரிய பாரம் தாங்கியிருக்காது. மூர்ச்சித்து விட்டிருப்பான். எங்களில் எவருக்கும் அந்த இச்சை இல்லை. அதுவும் உண்மை.

எங்கள் அனைவரிடமும் அவள் சமமாகப் பழகினாள். என்னிடம் அதிக நேரம் பேசுவாள். அவள் மீது நாங்கள் கொண்டிருந்த மதிப்பை, பக்தி கலந்த அன்பை அவள் உணர்ந்திருந்தாள்.

ஒரு தொலைதூரத்து ஊரிலிருந்து மதப் பிரசாரத்துக்காக இங்கே வந்த பிராட்டஸ்டெண்டு பாதிரியின் மகள் அவள். ஒரு கல்லூரியும் இரண்டு பள்ளிகளும் அவள்மீது பித்துற்றுத் திரிந்தன. சைக்கிளில் திரிபவர்களும், பின் தொடர்ந்து அலைபவர்களுமாக நூற்றுக் கணக்கான இளைஞர்களை அவள் அலட்சியத்தோடு, ஆத்திரத்தோடு, துக்கத்தோடு கடப்பாள்.

முற்றிலும் வேறுபட்ட எங்களை அவள் நேசித்தாள். எங்களைப் பார்க்கும்போது மலையாளக் கரையில்கூட விளையாடிய தோழர்களைப் பார்ப்பது போல் இருந்ததாகச் சொன்னாள். அந்த விருது தந்த மகிழ்ச்சியை வாழ்வில் எந்தப் பெரிய பட்டம் கிடைத்தாலும் இன்னும் நான் அடைய முடியாது.

அவளது பெண்மைக்கு அவளது கௌரவத்துக்கு எந்த பங்கமும் நேர்ந்து விடாத காவல் வீரர்களாக நாங்கள் இருந்தோம். சாதாரண விஷயத்துக் கெல்லாம் அவள் பொருட்டுப் பிறரிடம் மோதிக்கொண்ட எத்தனையோ நிகழ்ச்சிகள்.

எங்கள் மதிப்பீட்டின் உச்சத்திலிருந்து இப்படித் தலைகுப்புறச் சரிந்து ஒருநாள் அவள் வீழ்ந்து போவாள் என்று நினைக்கவும் துணிந்ததில்லை. அது நடந்தது. நான் விதியை நம்பத் தொடங்கினேன்.

அவளுடைய தகப்பனுக்கு நீரிழிவும் ரத்த அழுத்தமும் ஆரம்பித்தன. டாக்டர் கிருஷ்ணையாவிடம் சிகிச்சைக்குப் போவார். டாக்டர் சதா நேரமும் மதுவின் அடிமை. பெண்கள் பழக்கம் நிறைய. ஊருக்கே அது தெரியும்.



■ பம்பாய் கவர்னரும் மற்ற சில மந்திரிகளும் பம்பாய் கார்ப்பொரேஷனுக்குக் கட்ட வேண்டிய தண்ணீர் வரி பாக்கி சுமார் 13 லட்சம் !

— ஹிம்மத்




■ சென்னையிலிருந்து இருபதினாயிரம் ரூபாய் செலவில் சுதந்திரதின விழாவில் பாட்டுப் பாடத் தில்லிக்கு வரவழைக்கப்பட்ட கலைஞர்களுக்கு ஒரே ஒரு பாட்டுப் பாட மட்டும் சான்ஸ் கிடைத்தது. இந்த ஆறு நிமிட நிகழ்ச்சிக்கு டெலிவிஷனில் இடம் கிடைக்கவில்லை.

— டைம்ஸ் ஆஃப் இந்தியா — பாலி

கீர்த்தி அப்பாவை அழைத்துக்கொண்டு டிஸ்பென்சரிக்குப் போவாள். நாங்கள் கீர்த்தி போய் அந்த டாக்டரிடம் போவதாவது என்று கொதித்தோம். வைத்தியத்தில் கிருஷ்ணையா மன்னன். பெரிய இடங்களில் எல்லாம் தோல்வியுற்றுப் போன கேஸ்கள் அவரிடம் உயிர்ப் பிச்சை வாங்கியிருக்கின்றன. எனவே எங்கள் ஆட்சேபணை வலுவிழந்து விட்டது.

எங்கள் பரீட்சைகள் முடிந்து நாங்கள் கல்லூரியின் கதவுகளைத் தாண்டிய ஒரு நாளில் அந்தச் செய்தி வந்தது.

கீர்த்தி டாக்டர் கிருஷ்ணையாவை மணந்து கொண்டாள்! எங்கள் ஆதாரங்கள் குரூரமாகக் குலைக்கப்பட்டு, நாங்களும் எங்கள் மெல்லிய உணர்வுகளும் கண்ணாடிச் சிற்பங்கள் போல் நொறுங்கிய மாதிரி வேதனைப் பட்டோம்.

சந்திரமௌலி சொன்னான்: ''வாழ்க்கையிலே எது வேணும்னாலும் இனிமேல் நடக்கலாம்.''

சக்ரபாணிக்குப் பைத்தியம் பிடித்தமாதிரி கண்கள் வெறித்தன. ''நாம எல்லாம் அடிமுட்டாள்களடா ஆதி.''

''டாக்டர் மயக்கிட்டு இருப்பானு?''

''அவனுக்கு ஏற்கனவே அஞ்சு கொழந்தைகளடா ஆதி! கீர்த்தி அதை யோசித்திருக்கமாட்டாளா?''

ஒவ்வொருவரும் ரகசியமாக அழுதோம். நேரக் கூடாத இகழ்ச்சியில் எங்கள் சொந்த வாழ்க்கை வீசி எறியப்பட்டது போல் வேதனைப் பட்டோம். இப்போது யோசிக்கையில் அந்தப் பின்னங்களால் ஒவ்வொரு விதமாகத் தாக்குண்டு எங்கள் இளமைக்கு முற்றிலும் சம்பந்தமற்ற கோணங்களில் ஒவ்வொருவரும் போய்விட்ட மாதிரி தோன்றுகிறது.

அந்தக் கீர்த்தி...அவளை இப்படி மீண்டும் சந்திக்க நேரும் என்று நான் நினைத்ததில்லை. நான் ஊரை விட்டு வெகு தூரம் போய் விட்டேன், அதனாலேயே.

கீர்த்தி இப்போது சற்றுப் பருத்துவிட்டிருந்தாள். அவளது அழகில் பொறுப்பின் தீர்க்கமான ஆளுமை கலந்திருந்தது. அவள் கர்வத்தோடு நிற்பது போல் தோன்றியது.

ரயில் வந்தபோது முண்டியடித்துக் கொண்டு நான் முதலில் ஏறினேன். எனக்கு உட்கார இடம் கிடைத்துவிட்டது. கடவுளே! அவர்களும் அதே பெட்டிக்கு வந்தார்கள். ஜன்னலோரத்து ஒற்றை சீட்டில் நான் அமர்ந்திருக்கையில் எல்லோரும் உட்கார்ந்துவிட, கீர்த்தி மட்டும் இடம் இல்லாமல் நின்றாள்.

''ஆண்ட்டி! இப்படி வாயேன்!''

''ஏம்மா கீர்த்தி, இப்படி வந்துடேன்.''

''வேண்டாம்மா... ஜங்ஷன் வந்ததும் இடம் காலியாகும். நின்னுட்டே வரேன்.''

அவள் என்னருகில் நின்று கொண்டிருந்தாள். ஏதோ ஓர் உதாசீன வெறியில் அதைப் பொருட்படுத்தாமல் ஒரு பத்திரிகையில் முகத்தை மறைத்துக் கொண்டேன்.

ரயிலின் ஆட்டத்தில் அவளது கூந்தல் என்மீது ஓர் ஊஞ்சல் போல மெல்ல வந்து வந்து மோதிற்று. இப்படி ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருந்தால்...அந்த நாளில்... நான் நெகிழ்ந்துபோயிருப்பேன். இம்மாதிரி ஒரு வாய்ப்புக்காகக் காத்திருந்தாற் போன்று திடீரென்று நான் பெரிதும் வெறுக்கும் ஒரு தன்னிரக்கம் என்னைக் கவிந்தது. விழுங்கத் தொடங்கிற்று. அழுது விடுவேன் போலிருந்தது.

சட்டென்று நின்றேன்.

''நீங்கள் உட்காருங்கள்.''

''பரவாயில்லே. தாங்க்ஸ். நிக்கறேன்.''

எங்கள் விழிகள் சந்தித்தன. அவள் பரிவோடு என்னைப் பார்த்தாள். அந்த அக்கறையும் ஆர்வம் நிறைந்த அன்பும் ... முகத்தைத் திருப்பிக் கொண்டேன்.

''ப்ளீஸ். உட்காருங்கள்.''

என் 'ப்ளீஸி'லும் 'உட்காருங்க'ளிலும் புதைந்திருந்த உணர்ச்சிகளின் கனம் அவளுக்குப் புரிந்திருக்க வேண்டும். அவள் அமர்ந்து விட்டாள்.

ஜங்ஷன் வந்தது. நான் வேறு பெட்டியில் இடம் காலியிருக்கிறதா என்று பார்த்து வர இறங்கினேன். கடைசிவரை போய் நான் எதிர்த்துத் திரும்புகையில் கீர்த்தி கையில் ப்ளாஸ்குடன் எதிரில் வந்தாள். தன்னையறியாது இருவரும் நின்றோம்.

அவளே ஒரு பரிதாபகரமான புன்னகையோடு ஆரம்பித்தாள்.

''என் மேலே உங்களுக்கெல்லாம் ரொம்பக் கோபம், இல்லையா ஆதி!''

நான் விரக்தியோடு சிரித்தேன். ''கோபப்பட நாங்கள் யார்?''

அவள் அடிபட்ட மான்போல் என்னைப் பார்த்தாள்.

''ஏதோ எங்களை யெல்லாம் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே?''



உடல்
வலியா?




AMRUTANJAN
Pain Balm
Amrutanjan Ltd.

# சுட்ட புண்கள்! வெட்டுக் காயங்கள்!
# விரைவில் இட்டுப் பாருங்கள் பர்னல்

## குளுமையுடன் இதமளிக்கும் நிவாரணி






பர்னல் பட்டவுடனே சட்டென ஆற்றும்



ஆற்றும் போதே இதம்.



வீடு என்றால் விபத்துக்கள் நேரத்தான் செய்யும். ஆடிக் களிக்கும் குழந்தைக்கு அடிக் கடி அடிபடுவது சகஜம். சமையலறையிலே எந்த நேரத் திலும் கொதி எண்ணெய் தெறிக்கலாம்; காய்கறி நறுக் கும்போது விரலிலே பட்டு விடலாம். எனவே எப்போதும் கைவசம் இருக்கட்டும் பர்னல்! குளுமையுடன் இதமளிக்கும் பர்னல், தீப்புண், வெட்டு, சிராய்ப்பு, கட்டி மற்றும் காயங்களை ஆற்றும் பலபயன் நிவாரணி. இட்ட வுடன் இதமளித்து ஆற்றுவது பர்னல்.

**பர்னல் 40 ஆண்டுகளுக்கும் மேலாக கணக்கற்ற இல்லங் களில் காயமாற்றிவரும் நம்பகமான நிவாரணி**







ASP/8/8-15 TM

அவளது விழிகள் ஜங்ஷன் வெளிச்சத்தில் பளபளவென்று ஜொலித்தன. தழுதழுக்கும் கண்ணீர்.

''நீங்க நேரிலேயே பார்த்தீங்கள்ளே... இந்த மாதிரி ஒரு குடும்பம்...சதா நேரமும் போதை... இத்தனை பேர் இருந்தும் தன்னைக் கவனிக்கத் தனக்குப் பிடிச்சதைச் சமைக்க ஓர் ஆத்மா இல்லையே என்ற ஏக்கம். ஆதி! தயவுசெய்து அப்படிப் பார்க்க வேண்டாம். நான் ரொம்ப ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கேன். இதை நானாகத்தான் ஏத்துண்டேன்.''

நான் வியப்போடு, சற்று இகழ்ச்சியோடு பார்த்தேன்.

''என்னைப்பத்தி யார் எப்படி நெனச்சாலும் பரவாயில்லே. நீங்கள்ளாம் மட்டும் தயவுசெஞ்சு உண்மையைப் புரிஞ்சுக் கோங்க.''

கீர்த்தியின் குரலிலிருந்த முறையீடு என்னை வெருட்டியது.

''அவ்வளவு பெரிய டாக்டருக்கு ஒரு குழந்தை மாதிரி யாராவது தன்னைக் கவனிச்சாத் தேவலைன்னு ஏக்கம். மத்தவங்களுக்கு அவர் சம்பாதிக்கும் யந்திரம். மனைவியோ முடம். பாரலெஸிஸ்... ராத்திரியும் பகலுமா நோயாளிங்க. விரட்டி விரட்டிப் பிடிச்சுச் சிகிச்சைக்கு வர்றவங்க. அவ்வளவு பெரிய மேதையை 'நீ எப்படி இருக்கே? சாப்பிட்டியா, தூங்கினியா'ன்னு கேக்க ஆளில்லே. இப்போ நான் அவருடைய இணையாள் இல்லே. நர்ஸ் மாதிரி. அவரை நர்ஸ் பண்ணிட்டிருக்கேன்.''

கீர்த்தியின் கண்களிலிருந்து நீர் சிந்தி விட்டது.

''டு யூ பிலீவ் மீ? சின்னயிராச் சொல்றேன். நான் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொன்னப்போ அக்காவுக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? அவர் முதல் மீலனைச் சொல்றேன். என்னைப் பிடிச்ச பிடை தொலையும்டி அம்மான்னு சொன்னுள். அப்படியே இது வாஸ்தவம்.''

நான் திடுக்கிட்டேன். இப்படி ஒரு மனைவி! இப்படி ஒரு தியாகம்!

''இது தியாகமா? தற்கொலை கீர்த்தி.''

''சந்தோஷங்கள் வித்தியாசப்படலாம். இல்லையா ஆதி? நீங்களே சொல்லி இருக்கீங்களே. என்னிடம் நீங்கள்ளாம் நடந்துக்கிட்ட மாதிரி மத்தவங்க நடக்கலையே அது ஏன்?''

''இருந்தாலும் வாழ்க்கை முழுதும்...''

''அதுக்கென்ன இப்போ? நான் சந்தோஷமாத்தான் இருக்கேன். இங்கே எல்லோரையும் எனக்குப் பிடிக்கறது. நான் தப்புப் பண்ணிடலே ஆதி. இப்போ நான் பச்சாதாபப்படவுமில்லே. டாக்டர் இப்போ தெம்பா இருக்கார். நெறைய பேஷண்டுகளைக் கவனிக்கிறுர். நான் செஞ்ச பூஜா பலம்னு சொல்லிட்டு நிம்மதியா வந்து தூங்கறுர்.''

நான் மனம் நிசப்தமானது போல் நின்றேன்.

''ஊர்லே மத்தவங்க பேசிக்கிற மாதிரி நீங்கள்ளாம் நம்ப மாட்டீங்கன்னு நெனைச்சேன். சந்துருவும் பாலுவியும் ஒரு நாள் என்னைப் பார்த்துட்டுக் கோபமாப் போயிட்டாங்க. என்னமோபோல ஆயிடுச்சு எனக்கு. இப்போ நீங்களும்..... டோன்ட் யூ பிலீவ் மீ...நீங்கள்ளாம் எனக்கு ஆதர்சம் மாதிரி. நீங்களே... நீங்களே.''

முதல் மணி அடித்தான்.

''நான் பால் வாங்கணும். வரட்டா?'' என்று அவசரமாகக் கண்களைத் துடைத்தவாறே அவள் ஓடினுள்.

''டோன்ட் யூ பிலீவ் மீ..டோன்ட் யூ பிலீவ் மீ...'' என்று உருக்கமாக இறைஞ்சுகின்ற அந்தக் குரல் நிசப்தமாயிருந்த என் மனக் குகையுள் ஓடி ஓடி ஏதோ தேடுவது போல் அதிர்ந்து அதிர்ந்து எதிரொலித்தது.

## லில்லி இலையும் ஜெகானு பறவையும்

ராட்சத உருவம் கொண்ட, நீரில் வாழக் கூடிய லில்லிச் செடியை முதன் முதலில் தென் அமெரிக்க ஆறுகளில் கண்டுபிடித்தார், பிரிட்டிஷ் நாட்டைச் சேர்ந்த விஞ்ஞானி ஒருவர். 1837ம் ஆண்டு ராணி விக்டோரியா பதவியேற்ற ஆண்டாகையால் இந்த லில்லிக்கு ''விக்டோரியா ரீஜியா'' என்ற பெயரைச் சூட்டிச் சிறப்பித்து உலகுக்கு வெளிப்படுத்தினுர். இந்த லில்லிச் செடியின் மலர்கள் வெள்ளை முதல், இளம் சிவப்பு நிறம் வரை வெவ்வேறு வண்ணச் சேர்க்கைகளோடு விளங்குகின்றன. ஓர் இலையின் குறுக்களவு ஆறு அடி முதல் பன்னிரண்டு அடி வரை இருக்கும். ஒரு மலரின் குறுக்களவு பதினைந்து அங்குலமாகும்.

இந்த லில்லிச் செடியின்மேல் தன் வாழ்க்கையை நடத்துகிறது ''ஜெகானு'' என்ற பறவை. ''லில்லி மேல் நடக்கும் பறவை'' என்ற சிறப்புப் பெயர் பெற்ற இப்பறவை மிக நீளமான விரல்களையும், நகங்களையும் கொண்டுள்ளது. இதனுல் இப்பறவை லில்லி இலைகளின் மேல் மிகச் சாதாரணமாக நடந்து, அல்லது நின்று கொண்டு இலைகளின் மேல் ஊர்ந்து சென்று கொண்டிருக்கும் பூச்சிகளைப் பிடித்துத் தன் உணவாகக் கொள்ளும். இலைமேல் நின்றபடியே நீரில் உள்ள மீன்களையும் பிடித்து உணவாகக் கொள்ளும். லில்லிச் செடிகளுக்கு ஊறு விளைவிக்கக்கூடிய பூச்சிகள் நத்தைகள் ஆகியவற்றைத் தங்கள் உணவாகக் கொண்டு விடுவதால் இப்பறவைகள் லில்லிச் செடிக்கு ஆப்த நண்பர்களாகின்றன.

— அந்தோனி பேபில்



"அம்மா!"

"என்னடா சாமா?"

"உனக்கும் ராமண்ணாவுக்கும் மட்டும் சமைத்துக் கொள்!"

"ஏன்டா உனக்கு யார் படைக்கிறார்களாம்?"

"ஜவுளி வியாபாரி ஜனார்த்தனன் வீட்டில் கல்யாணம் தடபுடலாய் நடக்கிறது. நான் அங்கே போகப் போகிறேன், அம்மா!"

தாய் தடுத்தாள் மகனை. "சாமா! அது பெரிய மனிதர் வீட்டுக் கல்யாணம். உன்னைப் பார்த்ததும் விரட்டியடித்து விடுவார்கள். வேண்டாம். நான் சொல்வதைக் கேள். அங்கு போய் அவமானப்பட்டுத் திரும்புவாய்."

சாமா சிணுங்கினான். "அம்மா! நான் என்ன சின்னக் குழந்தையா? பன்னிரண்டு வயது ஆகவில்லையா? எனக்கு அந்த வீட்டில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று தெரியாதா அம்மா? ஆயிரம் பேரில் என்னை யாரம்மா கண்டார்கள்? அப்படித்தான் என்னை விரட்டியடித்தாலும் என்ன குடி முழுகியா போய்விடும்? எனக்கு என்ன அம்மா மானமும் அவமானமும் வைத்திருக்கிறது? நாமோ ஏழைகள். எனக்கு இது பழகி விட்டது. நான் போகத்தான் போகிறேன். நம் வீட்டு மட்டச் சோறு இருக்கவே இருக்கிறது. ஒரு வேளை நல்ல சாப்பாடுதான் என் வயிற்றில் விழட்டுமே? அதனால் என் பங்கு வீட்டில் மிச்சம் தானே?"



தாய் கண் கலங்கி நின்றாள். ஒரு பன்னிரண்டு வயதுச் சிறுவனுக்குள்ள பொறுப்புணர்ச்சியை எண்ணி உணர்ச்சி வசப்பட்டாள். மண்ணோடு மண்ணாகி விட்ட தன் கணவரை எண்ணி அவள் மனம் புலம்பியது. இந்தச் சின்னப் பருவத்தில், தன் மகன் ஒரு வேளைச் சாப்பாட்டை வெளியே கழித்தால் அந்த அளவு தன் வீட்டில் மிச்சம் பிடிக்கலாமே என்ற பொருளாதாரத் தத்துவத்தை உணர்ந்து விட்ட தன்மையை எண்ணி மனம் நெகிழ்ந்தாள்.

"சரிடா சாமா! நீ போய்வா! உன் அண்ணனுக்குத் தெரியாமல் போ!" என்று மகனுக்கு விடை கொடுத்து அனுப்பினாள் தாய்.

சாமா சென்ற சில நிமிடங்களுக்குப் பின்பு—

"அம்மா!"

"ஏன்டா ராமு, என்ன வேண்டும்?"

"உனக்குச் சாமா மட்டும்தான் மகனா?"

"ஏன்டா அப்படிக் கேட்கிறாய்? நீகூடத்தான்!"

"அவன் மட்டும் நல்ல சாப்பாடு சாப்பிட அனுமதி கொடுத்தனுப்பினாயே! நான் ஒருவன் இருப்பது உன் நினைவிலேயே படவில்லையே! என் கண்கள் பொட்டையாய்ப் போன இந்த இரண்டு வருடங்களாக உப்புச் சப்பில்லாத இந்த வெற்றுச் சோற்றைத் தின்று தின்று என் நாக்குச் செத்து விட்டதே. எனக்கும் அவனைப்போல் நல்ல மோக்ஷமான சாப்பாடு சாப்பிட வேண்டும் என்ற ஆசை இராதா? என் கண்தான் பொட்டை, நாக்குக்கூடவா அம்மா? என்னையும் அழைத்துப் போகும்படி நீ ஏன் சாமாவிடம் சொல்லவில்லை?"

இந்தச் சொற்கள் தாயின் உள்ளத்தில் முன்னைப்போலச் சுருக்கெனத் தைத்தன. ஒரு கண்ணில் வெண்ணெயும் மற்றொரு கண்ணில் சுண்ணாம்பும் கொண்ட தாயும் உலகில் இருக்க முடியுமா? பார்க்கப் போனால், ராமுவின் பேரில்தான் தாய்க்குப் பிரியம் அதிகம் என்று கூற வேண்டும்.

யன்! வைசூரியின் கொடுமையினால் இரு கண்களையும் அவன் பறிகொடுத்துவிட்ட காரணத்தினால்! இந்தப் பரந்த உலகில் அவன் தன் வாழ்நாளை எப்படிக் கழிக்கப் போகிறானோ, யார் யாருடைய ஏச்சுக்கும் பேச்சுக்கும் ஆளாகி நிற்கப் போகிறானோ என்ற ஏக்கத்துடன்கூடிய அநுதாபப் பாசம் காரணமாகத்தான். ஆனால்... தாபத்தினால் துடிக்கும் அவனுடைய உள்ளம், தாயின் பிரேமையுள்ளத்தை எங்ஙனம் புரிந்து கொள்ளும்?

அன்றொரு நாள்.

ராமு தன் கண்களை இழந்து விட்ட சில மாதங்கள் கழித்து நடந்த சம்பவம்.

உள்ளூர்ப் பிரமுகர் ஒருவருடைய வீட்டில் நடைபெற்ற ஒரு திருமணத்துக்குச் சாமா தன் அண்ணனையும் கையைப் பிடித்து அழைத்துச் சென்றுவிட்டான். தன் குருட்டு அண்ணனை அழைத்துச் செல்வது அவனுக்குப் பெரிய அவமானமாய்த்தான் இருந்தது. எனினும் அண்ணனின் பிடிவாதமும், தாயின் வற்புறுத்தலும் அவனைப் பணிய வைத்தன.

கல்யாண வீட்டில் நடுப் பந்தியிலே சகோதரர் இருவரும் உணவுப் பண்டங்களை வெளுத்து வாங்கிக் கொண்டிருந்த சமயம். சமையற்காரக் கப்புடு, சாமாவை நோக்கி, ஏளனமாய், ''ஏண்டா! நீ தண்டச் சோறு தின்பது போதாதென்று உன் குருட்டு அண்ணனையும் வேறு அழைத்து வந்துவிட்டாயா? இன்னும் உன் வீட்டில், நொண்டித் தம்பி, ஊமைத் தாயார், செவிட்டுத் தந்தை, முடவத் தமக்கை இப்படி யாரும் இல்லையாடா?'' என்று கேட்டான்.

சாமாவின் மனம் அவமானத்தினால் குன்றியது. சமையற்காரன் கப்புடு பேரில் அவனுக்குக் கோபமோ தாபமோ கிடையாது. தன் அண்ணன் மீதுதான் அவனுக்கு ஏற்பட்ட ஆத்திரம் எல்லாம்!

''இவனால் அல்லவா நமக்கு இந்த அவமானம்? வெலே என்று நான்மட்டும் இருந்திருந்தால் அவமானத்துக்கு இடமே இல்லையே! கஷ்டம்! கஷ்டம்!'' என்று மனம் வெதும்பினான் சாமா!

இந்தச் சம்பவத்தைத் தன் தாயாரிடம் கூறிக் குறைப்பட்டுக் கொண்டான் சாமா. இனி தன் அண்ணனை எங்கும் அழைத்துச் செல்வது கூடாது என்ற முடிவுக்கு வந்து,



# கின்னம் சிவந்தது

சரஸன்






அதைத் தாயாரிடம் தெளிவாகக் கூறிவிட்டான். தாய் அவன் உள்ளத்து உணர்ச்சியைப் புரிந்து கொண்டு, ''சரி'' என்று கூறினாள்.

அதனால்தான் இன்று சாமா ஜவுளி ஜனார்த்தனத்தின் வீட்டுத் திருமணத்துக்குச் செல்லப் போவதாகக் கூறிய சமயம் அண்ணனுக்குத் தெரியாமல் போகுமாறு கூறினாள். இதைக் கேட்டுக் கொண்டிருந்த ராமுவின் மனம் துடித்தது. தாயும் தன் தம்பியுடன் சேர்ந்து கொண்டு தன்னை வெறுக்கிறாள் என்று முடிவுக்கு வந்து விட்டான். தன் அங்க ஈனத்தினால் தன் தம்பிக்கு அன்றொரு நாள் நேர்ந்து விட்ட அவமானம் அவன் புத்தியில் படவே இல்லை. பொறுமை உள்ளம் விவேகத்தை வதைத்து விட்டது போலும்!

''ராமு!''

''......''

''ஏண்டா? என்மேல் கோபமா?''

தாய் மகனைத் தடவினாள் அன்புடன்.

''போதும்! என்னுடன் பேச வேண்டாம். எடு கையை! கண்களை மட்டும் குருடாக்கிய தெய்வம் என் உயிரையும் கொண்டு போயிருக்கலாம்!'' எல்லாவற்றையும் வெறுத்துவிட்ட நிலையிலே சொற்கள் வெளிவந்தன.

தாய் விம்மினாள். ''ராமு! என்னடா அசட்டுத்தனமான பேச்சு இது?'' மகனின் வாயைப் பொத்தினாள்.

''என்மீது மட்டும் உனக்கு உண்மையிலேயே அன்பு இருக்கும் பட்சத்தில், என்னையும் அழைத்துக் கொண்டுதான் போகவேண்டும் என்று சாமாவைக் கட்டாயப்படுத்தியிருக்க மாட்டாயா?''

கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது அவளுக்கு. ''ராமு! நீ இருக்கும் நிலையில் உன்னை யாராவது கேலி செய்தால், அதனால் மனம் நொந்து போவாயேடா! தவிர சாமாவுக்கு அவமானமாகத்தானே இருக்கும்? அவன் தனிமையில் சென்றால் எப்படியோ சமாளித்துக்கொண்டு விடுவான். உன்னை யாராவது கேலி செய்வதுடன் நில்லாமல், அடித்துவிட்டால் நீ என்ன செய்வாய்? என் மனம் கேட்குமாடா? வா! எழுந்து வாடா என் கண்ணே! சாப்பிட!'' — வாஞ்சையோடு அழைத்தாள்.

''உன் வெட்டிச் சோறு எனக்கு வேண்டாம். இந்நேரம் அவன் உயர்தரமான விருந்துச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருப்பான். ...ஹூம்!....'' பொருமினான் மகன்.

தாய் எவ்வளவோ மன்றாடியும் ராமு சாப்பிட மறுத்து விட்டான். அவள் உள்ளத்திலே பொறுமைத் தீ கொழுந்து விட்டு எரிந்தது.

மகன் பட்டினி கிடக்கும்போது தாய்க்கு மட்டும் உணவு செல்லுமா? அவளும் கம்மென்று படுத்துவிட்டாள் சுருட்டிக்கொண்டு. அவளையும் அறியாமல் எப்படித்தான் உறக்கம் கண்டதோ!

''அம்மா! அம்மா!''

விழிப்படைந்த தாய் தன் எதிரே நிற்கும் சாமாவை நோக்கினாள்.

''டேய் சாமா! உன் மகிழ்ச்சி வெறியிலே துள்ளிக் குதிக்காதே. எங்கேயாவது போய்த் தொலை. உன் அண்ணன் சாப்பிடவேயில்லை. நம் இருவர் பேரிலும் கோபம். நீ வயிறு நிறைய நல்ல சாப்பாடும் பட்சணமும் சாப்பிட்ட சந்தோஷத்தை உன் அண்ணன் காதில் விழும்படி தம்பட்டம் அடிக்காதே, போ வெளியே!'' என்று சீறினாள்.

''அம்மா! அண்ணா சாப்பிடவில்லையா?''

''ஊஹூம்! ஆ! சாமா! என்னடா? உன் கன்னம் ஏன் வீங்கியிருக்கிறது?'' தாய் பதறியபடியே கேட்டாள்.

''அம்மா! அந்த வீட்டில் என்னை அடித்து விட்டார்கள்.''

''நான் சொன்னேனே கேட்டாயாடா சாமா?'' கண்ணீரைச் சிந்தியபடியே அடிபட்ட கன்னத்தைத் தடவிக் கொடுத்தாள்.

''டேய்! நன்றாய் வேணும்! என்னை விட்டு விட்டு நீ மட்டும் நன்றாய் மொக்கினாயல்லவா?''—உள்ளிருந்தபடியே சீறினான் ராமு.

''அம்மா! நானும் சாப்பிடவில்லை. எனக்குப் பசிக்கிறது. சாதம் இருக்கிறதா?'' என்று கெஞ்சிய சாமாவை வியப்பும், பாசமும் கலந்த நிலையிலே நோக்கினாள் தாய்.

''நீ சாப்பிடவில்லையா?''

''ஊஹூம்! இலையில் உட்கார்ந்தேன். ஒருவர் டேய், டேய் என்று ஓடி வந்து என் கன்னத்திலே பளார் என்று இரண்டு அறைகள் கொடுத்து, 'பன்னாடைப் பயலே! வந்து விட்டாயா? எந்த வீட்டில் மேளம் கொட்டுகிறது, எங்கே வாழை மரம் கட்டியிருக்கிறது என்று தெருத் தெருவாய் அலைவது உன் தொழிலாய் விட்டதா? பிச்சைக்காரப் பயலே !' என்று திட்டிய வண்ணம் என்னைப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து கேட்டுக்கு வெளியே தள்ளினார்.''

''ஐயோ, என் செல்வமே!''

''நல்ல வேளை அம்மா!''

''என்னடா நல்ல வேளை?''

''இலையிலே இருந்த லட்டு, வடை, மாம்பழம் இவற்றை அண்ணாவுக்காக எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டேன், யாருக்கும் தெரியாமல். இதோ இந்தா, அம்மா! அண்ணாவுக்குக் கொடு!'' என்று கூறிய வண்ணம் மடியிலிருந்த ஒரு பொட்டலத்தை வெளியே எடுத்தான் சாமா!

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# வாழ்வே ஆவலின் நிறைவேற்றம்

## 'க்ளிக்' அடித்துவைப்பீர்...நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III, மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்-நினைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தயாரித் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும், என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர் ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லீவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு இவற்றைத் தயாரிப்போர்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).

SIMOES-AG-10-TAM





ஏகபோக வினியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை.

® புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான ஆக்பா-கேவார்ட், ஆன்ட்வெர்ப்/ லீவர்குஸன் ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.



ஆக்பா க்ளிக்—
இந்தியாவின் உன்னதப் புகழ்பெற்ற காமிரா.

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




# ENGINEERS' CUTTING TOOLS







At the Tool works of Addison & Company we have just one object—to be precise and to build tools which are highest in accuracy, in quality and in length of effective service.

TWIST DRILLS (INCLUSIVE OF **FORGE-FORM** STRAIGHT SHANK DRILLS) • MILLING CUTTERS • REAMERS • INVOLUTE GEAR CUTTERS • SLITTING SAWS • GROUND THREAD TAPS • CARBIDE TIPPED TOOLS.

**ADDISON & COMPANY LIMITED**
**158, MOUNT ROAD, MADRAS-2. INDIA.**

*(A Member of the Gauge and Tool Makers' Association, U.K.)*

ATW-33-B